APPROVED BY THE MADRAS TEXT-BOOK COMMITTEE

தென்மொழித்தேன் வாசகம்.

# மூன்றும் புத்தகம்.

மூன்றும் வகுப்பு




BY
REV. PETER ALOYSIUS
Principal,
St. Joseph's High School, Chingleput.

] 1934. [விலை அணா 4.

தென்மொழித்தேன் வாசகம்.

# மூன்றாம் புத்தகம்.

மூன்றாம் வகுப்பு.





BY
REV. PETER ALOYSIUS
Principal,
St. Joseph's High School, Chingleput.

பதிவு செய்தது]  1934.  [விலை அணா 4.

# பதிப்புரை.

---

தென்மொழித்தேன் வாசகம், இரண்டாவது வகுப்பு முதல் ஐந்தாவது வகுப்பு வரையில் எழுதப்பட்டிருக்கிறது. இது தற்காலப் போக்கை அநுசரித்துப் பலநாள் உபாத்திமைத் தொழிலில் பயின்றவர்களோடு கலந்து எழுதப்பட்டிருக்கிறது. ஒரேவகையான பல பாடங்களை எழுதாமல், கூடியவரையில் சிறுவர்களுக்கு மிகத் தேவையான விஷயங்களிற் பலவற்றைச் சுருக்கமாய் எளிய நடையில் ஒன்றுக்கொன்று படிப்படியாக ஏற்றமுள்ளதாக அமைக்கப்பட்டிருக்கிறது. மொழிகளும், வாக்கியங்களும், பொருள் விளக்கங்களும், ஒன்றிற்கொன்று படிப்படியாய் உயர்ந்து அமைந்திருப்பது நமது வாசக புத்தகங்களைத் தொடர்ச்சியாய் வாசிப்பவர்களுக்குப் புலப்படாமற் போகாது.

இந்த மூன்றாம் புத்தகத்தில் இரண்டாம் புத்தகத்தை விட வாக்கியங்கள் சற்று பெரியனவாயும் விஷய உணர்ச்சி கொஞ்சம் அதிகமாயும் உள்ள பாடங்கள் அமைக்கப் பெற்றிருக்கின்றன. தற்கால நோக்கத்தின்படி, சிறுவர்கள் கட்டாயம் அறியவேண்டிய பல விஷயங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. சரீர சௌக்கியத்துக்கு ஆதாரமான விஷயங்களும், சயன்ஸ் சம்பந்தமான விஷயங்களும், உயரிய நீதி புகட்டக்கூடிய கதைகளும் வரையப்பட்டிருக்கின்றன.

முக்கியமாய்ச் சிறுவர்கள் புகைப்படம் பிடிப்பதைப் பார்த்திருந்தும் பெட்டிவாத்தியம் கேட்டிருந்தும் அவற்றைப் பற்றிச்சிறுவர்கள் ஒரு சிறிதும் அறியாதவர்களாய் இருப்பதால் அவர்கள் வயதுக்கேற்ப அவற்றைப்பற்றிய சில குறிப்புகள் மட்டும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. சிறுவர்களுக்கு வசனமாய்ப் படிப்பதைவிட சாதாரண சந்தத்தில் பாட்டுகளைப்படிப்பது ஆநந்தத்தைத் தருமாதலால், நன்னெறி புகட்டும் சில கதைகளை எளிய நடையில் கூடியவரையில் திரிசொல்லின்றி இயற் சொற்களால் பாட்டுகளாக அமைத்திருக்கிறோம்.

இரண்டாம் புத்தகத்தைப்போலவே இதிலும் சில பழமொழிகளும் செய்யுட் பாடத்தோடு சேர்க்கப்பட்டிருக்கின்றன.

19—12—33
செங்கல்பட்டு.

**P. A.**



# பொருள் அட்டவணை.

தென்மொழித்தேன் வாசகம்.



# மூன்றும் புத்தகம்.

## 1. கடவுள்.



'கடவுளை நம்பினோர் கைவிடப்படார்' என்று கேள்விப்பட்டிருப்பீர்கள். கடவுளுக்கு ஆதியும் இல்லை; அந்தமும் இல்லை. அவர் எங்கும் நிறைந்திருக்கிறார். அவருக்குச் சரீரம் கிடையாது. அவர் ஆவியாய் இருக்கிறார்; ஆகையால், அவரை நாம் கண்களால் பார்க்கமுடியாது.

உலகத்தையும் அதில் அடங்கியுள்ள வஸ்துக்களையும் படைத்தவர் அவரே. இவ்வுலகத்தை நடத்துபவரும் அவரே; அழிப்பவரும் அவரே. அவரின்றி ஓரணுவும் அசையாது. கடவுள் நியாயமும் அன்பும் நிறைந்தவர். நியாயப்படி உலகத்தை நடத்துபவர்.

கடவுளை ஏமாற்ற ஒருவராலும் ஆகாது. நாம் செய்யும் ஒவ்வொரு காரியங்களையும் அவர் பார்த்துக்கொண்டேயிருக்கிறார். குற்றம் செய்த

வர்களைக் கடவுள் தண்டிப்பார். நல்லவர்களை ஆசீர்வதிப்பார். நாம் செய்த குற்றத்தை நினைத்து வருத்தப்பட்டால் நம்மை மன்னிப் பார். நாம் அவரை முழுமனதுடன் வணங்க வேண்டும்.





## 2. புகைப்படம்.

நாம் இறந்துவிட்டவர்கள் உருவத்தை எளிதில் மறக்கவேண்டியிருக்கிறது. இறந்த சில

காலத்திற்கெல்லாம் இறந்து விட்டவர்களின் உருவம் நம் மனதிற்கு வருவதில்லை. நம் முன்னோர்களுக்கு இறந்தவர்களின் உருவச்சாயை யைப் பிடிக்க முடியவில்லை. இப்பொழுதோ வெனில் நமக்கு வேண்டிய எந்த உருவங்களின் சாயையையும் பிடித்து வைத்துக்கொள்ளலாம்.

நாம் ஓர் நிலைக்கண்ணாடியின் எதிரே நின்றால் அதில் நமது உருவம் முழுமையும் தெரிகிறது. தவிர, நம்முடைய சரீர நிறத்தையும் உள்ளபடியே காணலாம். நாம் நகரும்போது நம்முடைய உருவச்சாயையும் மறையும். அந்த உருவத்தை மறையாமல் நிறுத்திவைக்க முடியாது.

புகைப்படத்திலோ நம்முடைய உருவச் சாயை அதை விட்டு நீங்காமல் எடுத்து வைக்கிறார்கள். ஆனால், புகைப் படத்தில் ஒரு வித்தியாசத்தைக் கவனிக்கவேண்டும். அதாவது நம்முடைய சரீரத்தின் நிறமும், துணியின் நிறமும் தெரியாது.





## 3. உலகம்.

நாம் வசிக்கும் உலகம் உருண்டை வடிவானது. இந்த உருண்டையும் இரு பிரிவாகப் பிரிந்திருக்கிறது. அவை கிழக்குப்பாதி உருண்டை மேற்குப் பாதி உருண்டை என்று இரு வகைப்படும்.

உலகத்தில் நீர்ப்பாகமே அதிகம். நிலப் பாகம் ஒரு பங்கானால் நீர்ப்பாகம் மூன்று பங்கா

யிருக்கிறது. மேற்சொன்ன இரண்டு உருண்டைகளிலும் உள்ள நிலப்பாகத்திற்குக் கண்டங்கள் என்று பெயர். கிழக்குப் பாதி உருண்டையில் நான்கு கண்டங்கள் இருக்கின்றன.

அவற்றுள், ஆசியா என்பது பெரியது. அந்த ஆசியாக் கண்டத்தில் அநேக தேசங்கள் இருக்கின்றன. அவைகளில் பெரியது இந்து தேசம். இந்து தேசந்தான் நாம் வசிக்கும் நாடு. நமது இந்தியா தேசமும் அநேக மாகாணங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு மாகாணமும் அநேக ஜில்லாக்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.

ஒவ்வொரு ஜில்லாவிலும் எண்ணிறந்த நகரங்களும், கிராமங்களும் இருக்கின்றன. அதில் நாம் ஒரு நகரத்திலேயோ கிராமத்திலேயோ வசிக்கிறோம். ஆகையால் நாம் வசிக்கும் ஊர் உலகத்தில் கோடியில் ஒரு பங்குகூட இராது.





## 4. ஜீவகாருண்யம்.

---

சில பிள்ளைகள் தும்பிகளைப்பிடித்து இறகைக் கிள்ளி விடுகிறார்கள். வேறுசிலர் பொன் வண்டுகளைப் பிடித்து அதன் கழுத்தில் கயிற்றைக்கட்டி ஆட்டுகிறார்கள். சில பிள்ளைகள் நோயினால் வருந்தி நடக்க சக்தியில்லாமலிருக்கும் மாடுகளை அடித்துத் துன்பப்படுத்துகிறார்கள். இன்னும் சிலர் குதிரை முதலியவற்றின் புண்களில் கோலை விடுகிறார்கள். இவையெல்லாம் தகாத காரியங்கள்.

நமக்கு ஒருவர் தீங்கு செய்தால் நாம் கஷ்டப் படுகிறோம். நமது புண்ணில் ஒருவன் குத்தினல் நமக்குப் பெருந்துன்பமாயிருக்கிறது. நம்மைப் போலவே அவைகளும் உயிருள்ளவைகள். நமக்கு நோயுண்டாவது போலவே அவற்றிற்கும் நோயுண்டாகும். நாம் நம்முடைய நோயைப் பிறருக்குச் சொல்ல முடியும். அவைகளோ வாயில்லாப் பிராணிகள். ஆகையால் அவைகள் தங்கள் கஷ்டங்களைப் பிறருக்குச் சொல்ல முடியாது.

கிளி முதலிய பட்சிகளையும் கூண்டில் அடைத்து வருத்துவது சரியல்ல. நம்மை ஒரு அறையில் விட்டு மூடி விட்டால் நாம் கஷ்டப் படுவோமல்லவா? நம் இஷ்டமான இடத்திற் குப்போக முடியுமா? அதுபோலவே கிளி முத லியவைகளும் கூட்டில் வருந்தும். ஆகையால் பிராணிகளிடத்தில் இரக்கமாயிருக்க வேண்டும்.





## 5. பூனை.

பிள்ளைகளே நீங்கள் பூனையைப் பார்த்திருப்பீர்களல்லாவா? இராத்திரி காலத்தில்தான் நாம் அவைகளை மிகுதியாய்க் காணலாம். பகற்காலத்தில் பூனைகள் வீட்டு மூலைகளிலும், கூரைகளிலும் படுத்து உறங்கும். பூனைக்கு எலிகளைப் பிடித்துத் தின்பதில் மிகப் பிரியம்.

பூனையின் தலை நாயின் தலையைப்போல் இல்லாமல் உருண்டையாய் இருக்கிறது. தலையின் மேல் செங்குத்தான காதுகள் இருக்கின்றன. அதனால் எலிகள் செய்யும் சிறிய சப்தங்களும் நன்றாய்க்கேட்கும். பூனையின் வாயைச் சுற்றி ஊசிபோன்ற மீசை மயிர்கள் இருக்கின்றன. மீசை மயிரைத் தொட்டால், பூனை கூசித் தலையைப் பின்னே இழுத்துக்கொள்ளும். பூனையின்

கண்களில் முதலில் வெள்ளை விழியும், அதன் நடுவில் ஒரு சிறுகோடுபோல் கறுப்பு விழியும் இருக்கின்றன. கருவிழியின் நடுவில் ஒரு வட்டமான சிறியபாகமிருக்கிறது. அதற்குக் 'கரு மணி' என்று பெயர். இந்தக் கருமணி சற்று இருட்டானதும் விரிந்து பெரியதாகி வட்டமாய் இருக்கும். உடல் முழுவதும் மயிரால் மூடப் பட்டு மிருதுவாய் இருக்கும்.

பூனையின் கால்களில் ஒவ்வொரு விரலுக்கும் கொக்கிபோன்ற நகம் உண்டு. அதைத் தனக்கு வேண்டும்போது நீட்டவும் வேண்டாதபோது சுருக்கிக் கொள்ளவும் கூடும். கால்களின் அடிப் பாகத்தில் மிருதுவான சதை மெத்தைபோல் இருக்கின்றது. அதனால், நடக்கும்போது சிறிதும் சப்தம் கேட்காது. பூனையின் நாக்கு சொரசொரப்பானது. பூனை தன் சரீரத்தில் அழுக்குப் படாமல் சுத்தமாய் வைத்துக்கொள்ளும். பூனை கோழிக்குஞ்சு, முயல், புறா முதலிய சிறுபிராணிகளைப் பிடித்துத் தின்னும்.



# 6. காற்று.

---

உனக்குப் புழுக்கமாயிருந்தால் நீ என்ன செய்கிறாய்? விசிறியால் விசிறிக்கொள்ளுகிறாய். விசிறும்போது காற்று வீசுகிறது. காற்றை நீ கண்ணால் பார்க்க முடியுமா? முடியாது. ஆனால், உனக்கு அது உண்டு என்பது எப்படித் தெரியும்? அது உன் உடம்பின்மேல் படுவதால் தெரிகிறது.

மரங்களும், கிளைகளும் சில சமயங்களில் அசைகின்றன. அவைகளை அசையச் செய்வது காற்றே. காற்று மேகங்களை அடித்துக்கொண்டு போவதையும் பார்க்கிறோம். பலமான காற்று அடிக்கும்போது மண்ணை வாரி அடிக்கும். மரங்களை வேரோடு பறித்தும், கிளைகளை முறித்தும் தள்ளும்.

பெருங்காற்றுக்குப் புயல் என்று பெயர். காற்று சுழன்று சுழன்றும் அடிக்கும். அதற்குச் சுழல்காற்று என்று பெயர். காற்று மனிதனுக்கு மிகவும் அவசியமானது. காற்று இல்லாவிடில் நமக்கு மரணம் நேரிடும். வெய்யிற் காலத்தில் காற்றடித்தால் நமக்கு ஆரோக்கியமாயிருக்கும். ஆனால் மழைகாலத்தில் அடிக்கும்காற்று நமக்குத்

துன்பம் விளைவிக்கும். வெய்யிற் காலத்தில் நாம் ஆடைகளை அதிகமாக அணிய விரும்புவதில்லை. மழைகாலத்தில் ஆடையை அதிகமாக அணிய விரும்புகிறோம்.





## 7. பறவைகள்.

---

பிள்ளைகளே! இந்தப் படத்தைப் பாருங்கள். அதில் காணப்படுபவைகளுக்குப் பறவைகள் அல்லது பட்சிகள் என்று பெயர். அவற்றுள், கிளி,

புரு முதலியவைகளைச் சிலர் வீட்டில் வைத்து வளர்க்கிறார்கள். கிளிக்குப் பேசக் கற்றுக்கொடுத்தால் அது அப்படியே பேசும். சிலர் பட்சிகளைக் கூட்டில் அடைத்து வைப்பது பாவம் என்றும் சொல்லுவார்கள். கூட்டில் பறவைகளை வளர்ப்பவர்கள் அவற்றினிடம் பட்சம் பாராட்டி, வேளை தவறாமல் ஆகாரங் கொடுத்துக் காப்பாற்ற வேண்டும்.

சில பறவைகள் இனிமையாய்க் கூவும்; குயிலின் குரல் செவிக்கு இனிமை பயக்கும். ஆந்தையின் குரல் கேட்பதற்குக் கடூரமாயிருக்கும். வாத்து, வான்கோழி, மயில் முதலிய பறவைகள் பெரியவைகள். மயில் கார்காலத்தில் தன் சிறகை விரித்தாடும். அப்பொழுது பார்ப்பதற்கு மிக அழகாயிருக்கும். வான்கோழி ஆடினால் அழகாயிராது.

சில பட்சிகள் மாமிசம் தின்னும். இராஜாளி, ஆந்தை முதலியன இவ்வினத்தைச் சேர்ந்தவை. சில பட்சிகள் பூச்சிகளைத் தின்று ஜீவிக்கின்றன. சில பட்சிகள் பழங்களையும், வேறு சில தானியங்களையும் தின்னுகின்றன.

பட்சிகள் யாவும் முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும். பறவைகளால் நமக்கு அநேக உப

யோகங்கள் உண்டு. பயிர் வர்க்கங்களை அழிக்கின்ற பூச்சி, புழு முதலியவைகளைச் சிலபட்சிகள் தின்று பயிரைக் காக்கின்றன. காக்கை முதலிய சில பறவைகள் செத்துப்போன எலி முதலிய பிராணிகளைத் தின்று ஆகாயம் கெடாமற் காக்கின்றன. கோழி முதலிய சில பட்சிகள் அநேகருக்கு ஆகாரமாக உபயோகப்படுகின்றன. பக்ஷி முட்டைகளையும் சிலர் தின்கின்றார்கள்.

வீட்டின் மேற்கூரையைக் கால் விரல்களால் பிடித்துத் தலைகீழாய்த் தொங்கிக்கொண்டிருக்கிறதே; அது என்ன ஜெந்து தெரியுமா? அதற்குத்தான் வெளவால் என்று பெயர். இது பட்சியா? மிருகமா? யோசியுங்கள். பட்சியைப் போல் பறப்பதால் இதைப் பட்சியென்றும் சொல்லலாம். ஆனால், மிருகத்தைப்போல் காதுகள் இருப்பதாலும், உடம்பில் மயிர் இருப்பதாலும், முட்டையிடாமல் குஞ்சுகளைப் பெறுவதாலும், கூர்மையான பற்களிருப்பதாலும் இதை மிருகமென்றும் சொல்லவேண்டும். ஆகையால் இதைப் பறவை இனத்திலும் சேர்க்க முடியவில்லை, மிருக இனத்திலும் சேர்க்க முடியவில்லை. இரண்டினத்தையும் அநுசரித்துப் பிறந்த விசித்திரப் பிராணியென்றே கூறவேண்டும்.



## 8. தாவரங்கள்.

---

தமிழர்கள் உயிர்வகைகளை ஏழாகப்பிரித்திருக்கிறார்கள். அவை தேவர்கள், மனிதர்கள், விலங்குகள், பறவைகள், ஊரும் ஜெந்துக்கள், நீர்வாழ்வன, தாவரங்கள் என்பன. இவற்றுள் தாவரங்களை உயிர் வகைகளில் கடைசியானதாகக் கருதினார்கள். எவ்வாறாயினும் அவற்றிற்கும் உயிர் உண்டென்பதே அவர்கள் கருத்து.

தாவரம் என்பதில் மரம், செடி, கொடி, புல், பூண்டு முதலிய அனைத்தும் அடங்கும். ஆனால், இவை தோன்றிய இடத்திலேயே நிலையாக நிற்கின்றன. இடம் விட்டுப்போவதில்லை. இத

ஞல் இவைகளுக்கு உயிரில்லை யென்று சிலர் எண்ணுகிருர்கள். அது சரியல்ல.

மரவகைகளும் வளர்கின்றன, பூக்கின்றன, காய்க்கின்றன, பழுக்கின்றன. அந்தப் பழங்கள் உதிர்ந்து மறுபடி முளைக்கின்றன. சில மரங்கள் பழங்களிலுள்ள கொட்டைகள் அல்லது விதைகளை நடுவதாலும் உற்பத்தியாகின்றன. மனிதனைப்போலவே தாவரத்திற்கும் வளர்ச்சி முதலியன இருக்கின்றன.

மனிதன் ஆரம்பத்தில் குழந்தையாயிருந்து நாளடைவில் பருத்து முதிர்வது போலவே, மரம், செடி முதலியவைகளும் ஆரம்பத்தில் சிறியனவாயும் மெல்லியனவாயுமிருந்து நாளடைவில் பருத்து வளர்கின்றன.

மனிதன் உணவு அருந்துவது போலவே தாவரங்களும் உணவு அருந்துகின்றன. பூமியிலுள்ள சாரமும், மனிதன் ஊற்றும் நீரும் மரம் செடிகளுக்கு உணவாகின்றன. ஆனுல் மனிதன் வாயிஞல் உணவை உட்கொள்ளுகிருன். மரமோ வேரின் மூலமாயும், இலைகளின் மூலமாயும் உட்கொள்ளுகிறது. உயிருள்ள பொருள்கள் மூக்கிஞல் மூச்சுவிட்டு வாழ்கின்றன; மரவகைகளோ இலையின் மூலமாக மூச்சுவிடுகின்றன.

உயிர் வகைகளின் உடலைக்காக்க உடல் முழுதும் தோல் மூடிக்கொண்டிருக்கிறது. மர வகைகளுக்கோ பட்டை முதலியன மூடிக்கொண்டிருக்கின்றன.

மரவகைகள்கூட ஒரு விதத்தில் இடம் விட்டு இடம் பெயர்ந்து போகின்றதென்று சொல்லலாம். மனிதனைப்போல் இஷ்டமானபடி நடமாட முடியாமற்போனாலும் அறுகம்புல் முதலியன முளைத்த இடத்திலிருந்து வேர் விட்டுத்தொடர்ந்து வெகுதூரம் செல்லுகின்றன; கொடிகள் நெடுந்தூரம் படர்ந்து பரவுகின்றன. சில கொடிகள் கொழுகொம்பைப் பற்றி ஏராளமாய்ப் படர்ந்து தழைக்கின்றன.

மரங்களிலும், பூக்களிலும் ஆண் பெண் பேதமிருக்கிறது. பனைமரத்தில் ஆண்பனை, பெண்பனை என்று பிரிவு ஏற்பட்டிருப்பது உங்களுக்குத் தெரியுமல்லவா? பெண்மரத்தில்தான் காய்கள் காய்க்கும், ஆண்மரத்தில் காய்கள் காய்ப்பதில்லை. இக்காரணங்களால் தாவரங்களும் உயிருள்ளவைகளே என்று சொல்லலாம். தாவரங்கள் பிராணிகள் விடும் கரியமிலவாயுவை உட்கொண்டு பிராணிகளுக்கு வேண்டியபிராணவாயுவை வெளிவிட்டு அவைகளுக்கு உதவி செய்கின்றன. தம்

மிடத்துண்டாகும் காய், கனி இலை முதலிய வற்றைத் தமக்கே உபயோகித்துக் கொள்ளாமல் பிறர்க்கும் உதவுகின்றன. தாவரங்களே இவ்வாறு உபகாரம் செய்யுமானால், மனிதர்களாகிய நாம் நம்மிடத்திலுள்ள பொருள்களில் கூடியதை அயலாருக்குக் கொடுத்து உதவவேண்டாமா? ஆகையால் நாம் ஒவ்வொருவரும் அயலாருக்கு நம்மால் கூடிய உதவிபுரிதல் வேண்டும்.





## 9 பெட்டிப்பாட்டு,

(சம்பாஷணை.)

குப்பன் :— அண்ணா! பெட்டி பாடுகிறதென்று சொல்லுகிறார்களே; அது நிசந்தானா?

தகப்பன் :— நிசந்தான். குழந்தாய் அது ஒரு ஆச்சரியந்தான்.

குப்பன் :— மனிதன் பாடுவதைக் கேட்டிருக்கிறேன். பட்சிகளும் இனிமையாய்ப் பாடுகின்றன. பெட்டி எப்படிப் பாடும் ?

தகப்பன் :—மனிதன் பாடுவதைப் பெட்டிகள் பாடுகின்றன.

குப்பன் !—மனிதர்களுக்கும் பட்சிகளுக்கும் வாயுண்டு; பெட்டிகளுக்கு வாய் உண்டா?

தகப்பன் :— நீ புகைப்படம் என்பதை ஏற்கனவே தெரிந்துக்கொண்டிருக்கிறாய். புகைப் படம் ஓர் உருவத்தைப் பிடித்துக் கொள் கிறது. அதுபோல் ஒருவன் பாடும் பாட்டையும் பிடிக்க ஒரு வழி இருக் கிறது.

குப்பன் :—புகைப்படம் காகிதத்தில் ஒட்டப் பட்டிருப்பதை நான் பார்த்திருக்கிறேன். பாட்டை எதில் ஒட்டி யிருக்கிறது ?

தகப்பன் :—புகைப்படத்தைப் போல் பாட்டுப் படத்தை நாம் பார்க்க முடியாது. பாட்டைக் கண்ணால் பார்க்க முடியுமா? காதால் தான் கேட்கக் கூடும்.

குப்பன் :—ஆமாம், பாட்டை எதில் அடைத்து வைப்பது ?

தகப்பன் :—நாம் உருவத்தைப் புகைப்படத்தில் பிடிப்பதுபோல் மனிதர்கள் பாடும் பாட்டை வட்டமான ஓர் தட்டில் பிடித்து வைத்திருப்பார்கள்.

குப்பன் :—ஆமாம், அது எவ்வாறு பாடும்.

தகப்பன் :—அதை ஒருவிதயந்திரத்தில் வைத்து அதிலுள்ள சாவியை முடுக்கி முன் வைத்த தட்டின் மேல் ஓர் ஊசியை நிறுத்தினவுடன், அது மனிதன் பாடுவது போல் பாடத் துவக்கும்.

குப்பன் :—ஒரு தட்டு ஒரு பாட்டுத்தானு பாடும்?

தகப்பன் :—இல்லை, தட்டிற்கு இரண்டுபக்கங்கள் உண்டல்லவா, அவைகள் ஒவ்வொன்றிலும் ஒவ்வோர் பாட்டுகள் அடங்கி இருக்கும்.

குப்பன் :—அப்பா! அந்த யந்திரம் அதிக விலையுள்ளதா?

தகப்பன் :—பல விலைகளில் கிடைக்கும்.

குப்பன் :—இவைகளை எங்கே செய்கிறுர்கள்?

தகப்பன் :—மேனுட்டில் செய்யப்பட்டு நமது நாட்டுக்கு வருகிறது.

குப்பன் :—அப்பா! நாமும் ஒன்று வாங்கினுல் ஒழிந்த நேரங்களில் அடிக்கடி பாடச் செய்யலாமே!

தகப்பன் :—சரி, ஆகட்டும் வருகிற மாதம் முதல் தேதியன்று நான் ஒரு பெட்டி வாங்கி வருகிறேன். அதை நீ பத்திரமாய்ப் பாதுகாக்கவேண்டும்.





## 10. நமது உடை.

நமது நாட்டில் உஷ்ணம் அதிகம். உஷ்ணம் மிகுந்த நாட்டு மக்களுக்குப் பருத்தி ஆடையே சிறந்தது. குளிர்மிகுந்த இடங்களிலுள்ள ஜனங்களுக்குக் கம்பளி ஆடைகள் ஏற்றவை. அதனால்தான் உஷ்ணம் மிகுந்த

நமது நாட்டு ஜனங்கள் பருத்தி நூலாடையையே விசேஷமாக அணிகிறார்கள்.

நாம் அணியும் பருத்தி ஆடை பருத்தி நூலிலிருந்து தயாரிக்கப்படுகிறது. பருத்தி திருநெல்வேலி, இராமநாதபுரம், கோயம்புத்தூர் முதலிய ஜில்லாக்களில் விசேஷமாய்ப் பயிராகிறது. முதலில் பருத்தியோடு சேர்ந்துள்ள விதையை நீக்கிச் சுத்தம்செய்து நூலாகநூற்று, அதைக்கொண்டு துணி நெய்வார்கள்.

விதைநீக்கிய பருத்தியை இராட்டினத்தின் உதவியாலும், இயந்திரத்தின் உதவியாலும் நூலாக நூற்பார்கள். இயந்திரங்களைக் கொண்டு அதிகமான நூல்கள் நூற்கலாம். நமது இராஜதானியில் அநேக இடங்களில் பல பெரிய இயந்திரசாலைகள் இருக்கின்றன.

இவ்வாறு நூற்ற நூல்களைக்கொண்டு வஸ்திரங்கள் நெய்கிறார்கள். நம் நாட்டில் அநேக சிறு கிராமங்களில் கைக்கோளர் என்னும் ஜாதியார் கைத்தறிகளைக் கொண்டே நெய்கிறார்கள். பம்பாய், கல்கத்தா முதலிய நகரங்களிலும், பிற நாடுகளிலும் இயந்திர உதவியைக் கொண்டே நெய்து நமது இராஜதானிக்கு ஏற்றுமதி செய்கிறார்கள்.



## 11. உணவு.

---

நாம் அதிக வேலை செய்தால் களைத்துப் போகிறோம். பிறகு நம்மால் வேலை செய்ய முடிவதில்லை. ஏன் தெரியுமா? ரயில் வண்டி ஓடும் பொழுது சில ஸ்டேஷன்களில் தண்ணீர் எடுத்துக்கொள்வதை நீங்கள் பார்த்திருக்கலாம். ஜலத்தை ஆவியாக்க நிலக்கரி அவசியம். ஜலமும், கரியும் ஆய்விட்டால் ரயில்வண்டி ஓடாது. நம்முடைய தேகமும் ரயில் வண்டியைப் போன்றதே. ஆனால், நாம் வேலை செய்வதற்குச் சாப்பாடு அவசியம்.

சாப்பிட்டால்தான் நம் தேகத்தில் சக்தி உண்டாகி நம் இஷ்டப்படி வேலை செய்ய முடியும். ஆகாரம் சரியாக இல்லாவிடில் தேகத்தில் சக்தி குறைந்து வேலை செய்ய முடியாது. நாம் சாப்பிடும் ஆகாரப்பொருள் சத்துள்ளதாயும் தேகத்திற்கு அனுகூலமானதாயும் இருக்கவேண்டும். நாம் உட்கொள்ளும் ஆகாரம் உட்சென்று வேறு மாறுதலையடைந்து சரீரத்திற்கு வலுவைக் கொடுக்கிறது.

நீ ஒரு பெரிய கல்லைத் தூக்க முடியுமா? முடியாது. உன்னால் தூக்கக்கூடிய பளுவு இவ்வளவுதான் என்று உனக்குத் தெரியும் அல்லவா? நீ தூக்க முடியாத பளுவைத் தூக்கினால் மூச்சுப் பிடித்துக்கொள்ளுமல்லவா? அப்படியே நீ சாப்பிட்டு ஜீரணிக்கக்கூடிய ஆகாரத்திற்கும் ஓர் அளவு உண்டு. நீ சில சமயங்களில் அளவுக்கு மிஞ்சிச் சாப்பிடுகிறாய். சுவைக்கு ஆசைப்பட்டு அதிகமாய்ச் சாப்பிட்டால் உனக்கு வியாதி உண்டாகும். பிறகு வைத்தியனிடம் சென்று மருந்து சாப்பிடவேண்டிவருகிறது.

நீ சுகமாக இருக்க விரும்பினால் உன் உணவைக் குறைக்கவேண்டும். குறித்த நேரத்தில் உட்கொள்ளவேண்டும். சத்துள்ள பொருளைச் சாப்

பிட வேண்டும். ஆகாரத்தை நன்ருய் மென்று விழுங்கவேண்டும். அவசரமாய் சாப்பிடக் கூடாது. தவருமல் ஓடியாடிவிளையாடவேண்டும்.





## 12. திருட்டு.

இந்தப்படத்தில் ஓர் பெரிய தட்டில் அநேக தின்பண்டங்கள் வைக்கப் பட்டிருக்கின்றன. அவைகளில் சில, உப்புப் பண்டங்கள்; சில, சர்க்கரையும் நெய்யும் சேர்ந்தவை. சர்க்கரையும் நெய்யும் சேர்ந்த பண்டத்தைப்பற்றி நீங்கள் நினைக்கும்போதே உங்கள் நாவில் ஜலம் ஊறும்.

அத்தட்டின் அருகில் ஓர் எலி உட்கார்ந்து அந்தத் தின்பண்டத்தில் சிறிது எடுத்துத் தின்கிறது. எலி சாதாரணமாய்ப் பகலில்வெளிவராமல் சிறிய வளைகளில் பதுங்கி இருக்கும். அது இரவில் வெளிச்சம் இருந்தால் நடமாடுவதில்லை. சத்தமில்லாமலும், வெளிச்சமில்லாமலும் இருந்தால் திருட்டுத்தனமாய் வளையிலிருந்து வெளியே வந்து வீட்டிலுள்ள தின்பண்டங்களைத் திருடிச்செல்லும். உனக்கு வேண்டுமென்று உன் அருமைத்தாய் ஏதாவது தின்பண்டத்தை வைத்து மறந்து விட்டால் அதை எலி எடுத்துப் போய்விடும். அப்படி எடுத்துப்போகும் எலிகளை அடியோடு ஒழித்துவிடவேண்டும். அதற்கு ஒரு எலிக்கூடு வாங்கி அதன் உள்ளே எலிக்குப் பிரியமான வஸ்துவை வைத்தால் அதைத் தின்பதற்கு அக் கூட்டிற்குள் சென்று அதில் வைத்துள்ள பண்டத்தை வாயினுல் கவ்வும். கவ்வும்போது கதவு 'டப்' என்று ஒரு சப்தத்துடன் மூடிக்கொள்ளும். அதனுல் எலி வெளியே வரமுடியாமல் தவிக்கும்.

மறுநாள் காலையில் வீட்டிற்கு வெகுதூரத்தில் கொண்டுபோய்க் கதவைத் திறந்து எலியை வெளியே விட்டு அதைக் கொன்று விடுவார்கள்.

அந்த எலிக்கு அப்பேர்ப்பட்ட கதி வருவதின் காரணம் அதன் திருட்டுத்தனம் அல்லவா?

நீங்கள் எலிக்கு ஆகாரம்வேண்டாமா என்று கேட்கலாம். அது தன் ஆகாரத்தைக் கஷ்டப் பட்டு சம்பாதிப்பதில் தடை என்ன? யாரோ தனக்கென்று கஷ்டப்பட்டுச் சேர்த்து வைத் ததை இந்த எலி சொந்தக்காரன்போல் எடுத்து சென்றது பிசகு. உன்பக்கத்தில் உட்கார்ந்திருக் கும் பையன் வைத்திருக்கும் ஏதாவது ஒரு பொருளை அவன் ஏமாந்திருக்கும்போது எடுப் பது திருட்டு. உனக்கு அந்தப் பழக்கம் வந்து விட்டால் மறுபடியும் திருடச்செய்யும். 'பல நாள் திருடன் ஒரு நாள் பிடிபடுவான்' என்றபடி நீயும் பிடிபடுவாய். உன்னையும் நன்றாய் உதைப் பார்கள். உன்னைப்பார்ப்பவர்கள் எல்லோரும் நகைப்பார்கள். ஆகையால் உனக்குச் சொந்தமல் லாததைக் கொள்ள விரும்பாதே. உன் வீட்டுச் சாமானாக இருந்தாலும் உனக்கென்று இல்லா ததைத் திருட்டுத்தனமாக எடுக்காதே.





## 13. அசுத்தம்.

---

நம் பாட்டிமார்கள் அடிக்கடி 'ஈயைப்போல் சுத்தமாயும் எறும்பைப்போல் சுறு சுறுப்பாயும் இரு' என்று சொல்வதுண்டு. அவர்களுக்கு ஈ அவ்வளவு சுத்தமல்ல என்று தெரியாது. எறும்பு சுறு சுறுப்புள்ளது என்பது நிஜமே, ஆயினும் ஈ சுத்தமுள்ளதல்ல. சர்க்கரை, அழுகின பண்டங்கள் இவைகளில் ஈக்கள் மொய்க்கின்றன. அவைகள் இடம் விட்டு மாறி மாறி வெவ்

வேறு பண்டங்களில் உட்காருவதை நீங்கள் பார்த்திருப்பீர்கள். சில சமயங்களில் ஈக்கள் நம் ஆகாரப்பொருள்களில் உட்கார்ந்து நமக்குப் பல கெடுதிகளை உண்டு பண்ணுகின்றன. அக்கெடுதிகள் எப்படி உண்டாகின்றன என்பதை அறிய, அவைகளின் உறுப்புகளில் சிலவற்றைப்பற்றி நாம் சிறிது அறிந்து கொள்ளவேண்டும்.

அதன் கால்களில் மெல்லிய மயிர்கள் இருக்கின்றன. அது ஓர் வஸ்துவின் மீது உட்காரும்பொழுது அதன் கால்களில் உள்ள மயிரில் அவ்வஸ்துவின் அணுக்கள் ஒட்டிக்கொள்ளுகின்றன. அவ்வணுக்களை நாம் கண்களால் பார்க்க முடியாது. அவைகளை பூதக்கண்ணாடியின் மூலமாய்ப் பார்க்கலாம்.

அந்த ஈ நம் ஆகாரப் பொருள்களின்மேல் உட்காரும்பொழுது அவ்வணுக்கள் நம் ஆகாரப் பொருளில் கலந்துவிடுகிறது. சாக்கடை, அழுகிய பண்டங்கள் இவைகளின்மேல் உட்கார்ந்த ஈக்கள் நம் ஆகாரப் பண்டங்களில் உட்காருமல்லவா? ஆகையால் நாம் நம் பண்டங்களை ஈக்கள் அணுகாதபடி காப்பது அவசியம். எல்லாப் பண்டங்களையும் மூடி வைப்பது நலம்.

இப்படத்தில் உள்ள பையன் எவ்வளவு அசுத்தமாக இருக்கிறுன். அவன் தலைமயிர் விரிந்து பார்ப்பதற்கு விகாரமாயிருக்கிறது. தலையில் ஈரும், பேனும் ஏராளமாயிருக்கும்போல் தோன்றுகிறது. அவன் உண்ணும் உணவில் ஈக்கள் மொய்த்துக் கொண்டிருக்கின்றன. எலிகளுக்கோ குறைவில்லை. அவைகள் சாப்பிட்ட மிகுதியே இவன் சாப்பிடுவான்போலிருக்கிறது. ஆகையால் நாம் இந்தப் படத்திலுள்ள பையனைப்போல் இராமல் சுத்தமாய் இருக்கவேண்டும்.





## 14. தபால்.

---

முருகன் :— அண்ணு, நீ இப்போது எழுதிய கடிதம் எப்படி திருச்சிஞப்பள்ளிக்குப் போகும்?

தந்தை :— இதைத் தபால் பெட்டியில் போட்டால் போய்விடும்.

முருகன் :— அது எப்படி போய்விடும்? தபால் பெட்டி போகுமா?

தந்தை:—பிரதி தினமும் தபால் பெட்டியைத் திறப்பதை நீ பார்த்ததில்லையா? அதிலுள்ள கடிதங்களைத் தபால் சேவகன் கொண்டுபோய் தபாலாபீஸில் கொடுக்கிறான். அவர்கள் அதை அனுப்பி விடுவார்கள்?

முருகன்:—அவர்கள் அனுப்புவதெப்படி?

தந்தை:—அவர்கள் காகிதங்களின் மேல்விலாசத்தைப் பார்த்து ஊர்வாரியாய்ப் பிரித்து முத்திரையிடுவார்கள். பிறகு பையில் போட்டுக்கட்டி குறித்த ஊருக்குச் செல்லும் ரயிலுக்கு அனுப்புவார்கள்.

முருகன்:—அங்கிருந்து சொந்தக்காரருக்குக் கடிதம் எப்படிப் போகும்?

தந்தை:—குறித்த ஸ்டேஷன்களில் இறக்கி அங்குள்ள தபாலாபீசுக்கு அனுப்புவார்கள். அவர்கள் அதில் முத்திரையிட்டு மேல் விலாசக்காரருக்குச் சேர்ப்பிக்கும்படி தபால் சேவகனிடம் கொடுப்பார்கள். அந்தத் தபால் சேவகன் கடிதத்தை மேல் விலாசத்தில் கண்டவர்களுக்குச் சேர்ப்பான்.

முருகன் :—நமது கடிதம் சேருவதற்கு இவர்கள் எல்லாம் ஏன் வேலை செய்கிறார்கள்?

தந்தை :—அவர்களுக்கெல்லாம் சர்க்காரார் சம்பளம் கொடுக்கிறார்கள்.

முருகன் :—நாம் ஒன்றும் கொடுக்கவேண்டாமா?

தந்தை :—நாம் அவர்களுக்குக் கொடுக்கவேண்டாம். நாம் கார்டு, கவர்களுக்குக் கொடுக்கும் விலையிலிருந்து சர்க்காரார் கொடுப்பார்கள். இது போதாவிட்டாலும் வேறு வரும்படியிலிருந்து சர்க்காரார் கொடுப்பார்கள்.

முருகன் :—நாம் முக்காலணா கார்டு வாங்கி எழுதிப் போட்டுவிட்டால் நம் தேசத்தில் எவ்வளவு தொலைவானாலும் நம் கடிதம் சேர்கிறதே. இது நமக்குப் பெரிய லாபந்தானே?

தந்தை :—அதற்கென்ன தடை? லாபந்தான். கவர்ன்மெண்டார் நமக்காக இந்த ஏற்பாடெல்லாம் செய்திருக்கிறார்கள்.





## 15. பெற்றோரிடம் அன்பு.

---

"அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்றிருத்தலால், கடவுளுக்குப் பிறகு நமது பெற்றோரே நமக்குத் தெய்வம். உன்னுடைய தகப்பன் உன்னை வளர்ப்பதற்கும், காப்பாற்றுவதற்கும், மழையிலும், காற்றிலும், வெயிலிலும் எவ்வளவு கஷ்டப்பட்டு உழைத்துச் சம்பாதிக்கிறார். வேலை செய்யுமிடத்தில் ஒரொரு சமயத்தில் அவருடைய எஜமானனிடத்திலோ, மற்ற

அதிகாரிகளிடத்திலோ, எவ்வளவோ ஏச்சுப் பேச்சுகள் கேட்கும்படி நேரிடுகிறது. இவைகளை யெல்லாம் ஏன் சகித்துக் கொண்டுவருகிறாரென்றால், பொருள் தேடி, உன்னையும், உன் சகோதரர், சகோதரிகள் முதலானோரடங்கிய சமுசாரத்தையுங் காப்பாற்றுவதற்காகத் தானன்றோ?

உன் தாயோ, நீ ஒரு முழமளவு குழந்தையா (சிசுவா) யிருந்தது முதற்கொண்டு, பெரியவனாகு மட்டும் உனக்கு அமுது ஊட்டி, சீராட்டிப் பாராட்டி அன்புடன் வளர்க்கிறாள். நீ குழந்தையாயிருக்கையில் அழுவாயானால், அதை அவள் சகியாதவளாய், தான் செய்யும் சமுசார வேலைகளையெல்லாம் நிறுத்திவிட்டு, உடனே உன்னிடம் ஓடிவந்து, உன்னைத் தூக்கிக்கொண்டு சமாதானப் படுத்துவாள். உனக்கு வியாதி வராமலிருக்க, தனக்கு இஷ்டமான வஸ்துக்களைச் சாப்பிடாமல் அவள் உனக்காகப் பத்தியம் பிடிப்பாள். நீ வியாதியுற்றுக் கஷ்டப்படுங்காலத்தில் உன் மீதுள்ள அன்பின் மிகுதியால், அவள் ஊண் உறக்கமின்றி, இரவும் பகலும் எந்நேரமும் உன் அருகிலிருந்து, உன்னை ஈ எறும்பு கடிக்காமலும், உனக்கு வேறு தீங்கு நேராமலும் உன்னைக்கட்டிக் காத்து உனக்கு வேண்டும்பத்திய

பரிகாரங்களைச் சிறிதும் சலிப்பில்லாமலும், மிக ஜாக்கிரதையுடனும் செய்து, உன்னைக் காப்பாற்றுகிறாள். ஆ! என்னே தாயின் அன்பு!

உன் பெற்றோர்கள் உன்னை வளர்க்கிறதற்காக எவ்வளவு கஷ்டம் அனுபவிக்கிறார்கள் பார்த்தாயா? ஆகையால், நீ அவர்களுக்கு எப்போதும் கீழ்ப்படிந்து அவர்களுக்குப் பிரியமானபடி நடக்கவேண்டும். அவர்களுக்கு மனம் நோகும்படி ஒரு காரியமும் செய்யவொண்ணாது. அவர்கள் வயது தளர்ந்து விருத்தாப்பியராகுங் காலத்தில், அவர்களுக்கு நல்ல சாப்பாடும், துணிமணிகளும் கொடுத்து, அவர்களுக்கு இன்னும் வேண்டிய எல்லா சௌகரியங்களையும் சந்தோஷத்துடன் திருப்தியாய்ச் செய்து, அவர்களை ஆதரிக்கவேண்டும். நீ இளமையாயிருக்கையில் ஒன்றும் சம்பாதிக்க இயலாத காலத்தில் உன்னை அவர்கள் அன்புடன் காப்பாற்றியது போல, அவர்கள் மூப்புற்று ஏதுஞ் செய்யத் தள்ளாதவர்களாயிருக்குங் காலத்தில் நீ அவர்களைப் பிரீதியுடன் பராமரித்துக் கண்ணை இமை காப்பது போலக் காப்பாற்றப் பெரிதும் கடமைப் பட்டிருக்கிறாய் என்பதை நீ எப்போதும் சிந்தையில் இருத்தவேண்டும்.

முன்னொரு காலத்தில், சிசிலித் தீவிலுள்ள 'எட்னு' என்னும் எரிமலையானது, திடீரென நெருப்பையும் கந்தகத்தையும் தன் வாயால் கக்கி வேகத்துடன் வாரியிறைக்கத் தொடங்கினபோது அதன் அருகே வாசஞ் செய்து கொண்டிருந்த குடியானவர்கள் எல்லோரும் திடுக்குற்று, தங்கள் தங்கள் உயிரைக் காப்பாற்றிக்கொள்ளும் அவசரத்தில் தங்களுக்கு அருமையான பொருள்களையும், ஆஸ்திபாஸ்திகளையும் கைக்கு எட்டியமட்டும் தீவிரமாக வாரிக்கொண்டு ஓடலானுர்கள். ஆனுல் தங்கள் பெற்ருர்மீது பேரன்பு பூண்டிருந்த இரண்டு சகோதரர்கள் என்ன செய்தார்கள் எனில், தங்கள் பணம், காசு, பொருள், பண்டம் எதையும் சட்டை செய்யாமல், தள்ளாமையால் நடந்து ஓடச் சக்தியற்றிருந்த தங்கள் பெற்ருேர்களில், தந்தையை ஒருவனும், தாயாரை ஒருவனுமாகத் தூக்கித் தோள்மேல் வைத்துக்கொண்டு, மற்றவர்களோடு ஓடினுர்களாம்! பார்த்தீர்களா, பிள்ளைகளே! இவர்கள் அல்லவா உண்மை அன்புள்ள மக்கள்? நீங்களும், இந்த அருமை மக்களைப் போல, உங்கள் தாய் தந்தையரை மெய்யன்புடன் நேசித்துப் பூசித்தல் வேண்டும்!

"தந்தை தாய்ப் பேண்"

# 16. ஓநாயும், கொக்கும்.

—

முன்னொருநாள் ஓர்ஓநாய் முடுக்காக ஓராட்டைத்
தன்னுடைய வலிமையினுல் தாக்கிட்டே
[கொன்றதனை
இன்பமுற வெகுவிரைவாய் ஏப்பமிட்டுத்
[தின்னுகையில்
அன்னதனின் எலும்பொன்று அடித்
[தொண்டை தனில்சிக்க
மிகத்துன்பம் ஓநாய்க்கு மிஞ்சிடவே தானுகத்
தகவுடனே அதைப்பிடுங்க தான் தெரிந்த
[தொழிலெல்லாம்
மிகப்புரிந்தும் முடியாமல் வெகுபேரை நாடியதே
அகமகிழ அப்போது அகப்பட்ட தொருகொக்கு
கொக்கண்டை ஓநாயும் குறிப்புடனே ஓடிவந்து
பக்குவமாய் என்தொண்டை பற்றியிடும்
[எலும்பதனை
இக்கணமே நீள்கழுத்தை லேசாக
[உள்விட்டு
அக்கரையாய் எடுத்துவிடு அரும்பரிசு
[தருகின்றேன்

என்றவுடன் சூதறியா ஏழைகொக்கு மெய்யாகத்
தன்றனக்கு வெகுமானம் தருமென்று நம்பியதால்
சொன்னவுடன் தன்தலையை சுலபமதாய்ஓநாயின்
இன்வாயில் விட்டெலும்பை இலேசாக
[எடுத்ததுவே.
பிற்பாடு கொக்கதுவும் பிரியமுடன் ஓநாயை
எற்களித்த வாக்குபடி எங்கேஎன் வெகுமதியும்
நற்பரிசும் தானெங்கே நல்கெனவே ஓநாயும்
அற்பநிலை கொக்கேநீ அறியாயோ என்பரிசு
உன்னுடைய கழுத்தென்றன் உள்வாயில்
[இருக்கையிலே
நன்ருகக் கடிக்காமல் நான்விட்டேன் நலமாகப்
பன்னளும் உணர் அதுவே பரிசென்று
[பகர்ந்திட்டே
ஒன்னர்போல் ஓடிற்றே ஓநாயும் அப்பொழுதே
ஆதலினல் எப்பொழுதும் அற்பர்களை நம்பாதே
காதலினல் அவர்களிடம் கருணையொன்றும்
[தோன்ருது
பாதகமே செய்திடுவார் பயனளித்தோர்
[தமக்கென்றும்
சாதகமே செயமாட்டார் சகஜமது தரணியினில்.





## 17. நோயாளிகளுக்கு உதவி.

---

அதோ படுத்துக்கொண்டிருக்கிற மாட்டைப்பார். அந்த எருது வியாதியாகப் படுத்துக் கொண்டிருக்கிறது. வியாதி வருமுன்னே அது கொஞ்சம் வைக்கோலைச் சேர்த்து வைத்துக் கொண்டது. ஏன் அப்படிச் சேர்த்து வைத்துக் கொண்டது? வியாதியாய் விழுந்தால், தான் வெளியேபோய் மேய்ந்துவிட்டுவரக் கஷ்டமாயிருக்குமென்று அப்படிச் செய்துகொண்டது. வியாதிவந்தபிறகு அந்த எருது வைக்கோலைத்

தினந்தோறும் கொஞ்சங் கொஞ்சமாகத் தின்று கொண்டே வந்தது.

அந்த எருதுக்கு எதிரே இரண்டு வேறு காளைகள் நின்றுகொண்டிருக்கின்றன. அவைகள் வியாதியோடு படுத்திருக்கும் எருதுக்கு எதிரேயுள்ள வைக்கோலைத்தின்கின்றன. அந்த இரண்டு காளைகளும் ஏன் அங்கே வரவேண்டும்? அந்த எருது வியாதியாயிருப்பதைக் கேள்விப்பட்டுப் பார்த்துவிட்டுப்போக வந்தனபோலும். வந்தவிடத்தில் வியாதியாயிருந்த எருதுக்கு ஒத்தாசை செய்யாமல், அது சேர்த்து வைத்திருந்த வைக்கோலையெல்லாம் தின்றுவிட்டுப் போயின. ஆனதினால், வியாதியுற்ற எருதானது நோயின் கொடூரம் ஒரு பங்காளுலும், ஆகாரமில்லாததினுல் இருமடங்காக வருந்திக் கஷ்டமுற்றுக் கொஞ்ச நாளில் இறந்துவிட்டது.

பிள்ளைகளே! இந்த இரண்டு காளைகள் செய்தது சரிதானு? இல்லை. நாம் எப்போதும் வியாதியாயிருப்பவர்களைச் சந்திக்கப் போனுல், அவர்களுக்கு ஆறுதல், தேறுதல் சொல்லி, பணத்தினுலாவது, வேறு வகையினுலாவது சகாயம் செய்துவிட்டு வரவேண்டுமே அல்லாமல், அவர்கள் பொருளுக்குச் செலவு வைத்து, அவர்

களுக்குக் கஷ்டம் உண்டுபண்ணிவிட்டு வரக் கூடாது. இது பெரும் பாதகமன்றோ! ஆனதினால், நீங்கள் வியாதியஸ்தர்கள்மேல் விசேஷ இரக்கம் வைத்து, அவர்களுக்கு உங்களாலான உதவியெல்லாம் செய்யப் பிரயாசைப்படுங்கள்.





## 18. சிவாஜி.

மஹாராஷ்டிரர் இந்தியாவின் மேற்கிலுள்ள மலைப்பிரதேசங்களில் வசித்திருந்த ஒரு ஜாதியார்.

அவர்களுள் பான்ஸ்ல வம்சத்திய ஷாஜி என்னும் ஒருவர் இருந்தார். அவர் பீஜபூர் சுல்தானுடைய சேனைத் தலைவர். அவருக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அக்குழந்தையின் பெயர் சிவாஜி.

சிவாஜிக்கு எழுதப்படிக்கத்தெரியாது. ஆயினும் அவர் சிறந்த புத்திமான். அவருடைய தாயார் ஜீஜிபாய், அவருக்கு வீரம், உண்மை, தேசபக்தி, முதலியவற்றைப் பல கதைகள் மூலமாக உண்டாக்கி வந்தாள். சிவாஜி தம்முடைய தாயைத் தெய்வமாகவே பாவித்து வந்தார்.

அக்காலத்தில் முகம்மதியர், மஹாராஷ்டிரரைத் துன்புறுத்தினர். சிவாஜி சிறு வயது முதற்கொண்டு வில், வேல், வாள், முதலிய ஆயுதங்களில் பயின்று சிறந்த போர்வீரரானதால்,முகம்மதியர்களை எதிர்க்க விரும்பினர். அவர் தன் பத்தொன்பதாவது வயதில் பெரிய சேனையுடன் புறப்பட்டுப் பகைவர்களைத் தோற்கடித்து, மஹாராஷ்டிர ராஜ்யத்தை ஏற்படுத்தினர்.

சிவாஜியின் வீரப்பிரதாபத்தை அடக்க வேண்டும் என்று பீஜபூர் சுல்தான் தன்னிடமுள்ள அப்சல்கான் என்னும் சேனைத்தலைவனை, பெரிய சேனையுடன் அனுப்பினர். அவன் துள

ஸாபுரத்திலுள்ள பவானி தேவியின் சிலையை உடைத்து நாசம் செய்தான். கோவிலிலுள்ள பொருள்களைக் கொள்ளையடித்தான். இச்செய்தி சிவாஜிக்கு எட்டியதும் அவர்மனம் கொதித்தது.

அவர் ஒரு தந்திரம் செய்து அப்ஸல்கானு டன் சமாதானம் செய்து கொள்வதாகச் சொன் ஞர். அப்ஸல்கான் அவரைச் சந்தித்து, அவரைத் தழுவிக்கொண்டு, தான் மறைத்து வைத்திருந்த உடைவாளை எடுத்தான். சிவாஜி தந்திரமாகத் தப்பி, தமது வாளால், அவனைக் கொன்ருர். அதனுல், பீஜபூர் சுல்தான் சிவாஜி மன்னரிடம் சமாதானம் அடைந்தான்.

சிவாஜி சிறந்த மகாராஜராக விளங்குவதைக் கண்ட ஔரங்கசீப்பு என்னும் மொகலாய சக்கர வர்த்தி, அவரை ஒரு விருந்துக்கு வரவழைத்து, தந்திரமாக அடைத்தமையால், தானும் தந்திர மாகவே வெளிக்கிளம்ப வேண்டும் என்று எண்ணி, சிறையிலிருந்து ஒரு பழக்கூடையில் உட்கார்ந்து தப்பிப்போனுர். அது முதல் ஔரங்கசீப்பின்மீது அடங்காத கோபம் உண் டாயிற்று. ஆனுலும், ஔரங்கசீப்பு சிவாஜியுடன் சமாதானம் அடைந்தார்.

இவ்வாறு சிவாஜி, நாளடைவில் பலநாடு களைக் கைப்பற்றினர். பீஜபூர், கோல்கொண்டா சுல்தான்களைத் தமக்கு அடங்கிக் கப்பங் கட்டும் படி செய்தார். பல கோட்டைகளை அவர் கைப் பற்றிக்கொண்டார். பிறகு 1674-ஆம் ஆண்டில் "ரைகர்" என்னும் ராஜகிரி கோட்டையில் முடி சூட்டிக் கொண்டார். வீரப்பிரதாபங் கொண்ட சிவாஜிமன்னர் கி. பி. 1680-ஆம் ஆண்டு இறந்தார்.





## 19. ஒட்டகம்.

---

ஒட்டகம் நம் நாட்டில் அதிகமாக இல்லை; என்றாலும் ஒட்டகம் தமிழர்களுக்கு வெகு காலமாகத்தெரிந்துள்ள மிருகங்களில் ஒன்று. அதன் உருவம் அழகாயிராது. அது பார்வைக்கு விகாரமாகத்தோன்றும்.

ஒட்டகத்தின் கால்கள் நீண்டிருக்கும். அதன் அடிகள் சதைப்பற்றுள்ளனவாய் அகன்று இருக்கும். இதனால், வேறெந்த மிருகமும் செல்லமுடியாத மணல் வழிகளில் ஒட்டகம் சுலபமாய் நடந்து செல்லும். பாலைவனங்களில்

பிரயாணம் செய்பவர்கள் ஒட்டகத்தின்மேல் ஏறிப் போவார்கள்.

அதன் மேலுதடு பிளவு பட்டுள்ளது. அது அதன் இரையைக் கடித்துத் தின்பதற்கு அனு கூலமாயிருக்கிறது. ஒட்டகத்தின் மூக்குத் துவா ரங்களுக்குள் ஒரு வகை ஜவ்வு தொங்கிக்கொண் டிருக்கும். அதனால் மணலில் நடக்கும்போது மணல் மூக்கில் புகுவதில்லை.

ஒட்டகத்தின் வயிற்றில் அபூர்வமான ஒரு வகைத் தண்ணீர்ப்பை அமைந்திருக்கிறது. அதில் பல நாளைக்கு வேண்டிய தண்ணீரை நிரப்பி வைத்துக் கொள்ளும். தண்ணீர் அகப் படாத பாலை நிலத்தில் பிரயாணம் செய்பவர்கள் தாகத்தினால் வருந்தும்போது சில சமயங்களில் ஒரு ஒட்டகத்தைக் கொன்று, அதன் வயிற்றி லுள்ள தண்ணீரை எடுத்துக் குடிப்பதும் உண்டு. ஒட்டகத்தின் முசுப்பு கொழுத்துப் பருத்து வளரும். ஆனால், அது உணவின்றிப் பட்டினி யாயிருக்கையில் அக்கொழுப்பு கரைந்துவிடும். அதனால் முசுப்பு சிறுத்துச் சுருங்கிவிடும்.

ஒட்டகத்தினால் அரேபியர்களுக்கு அதிகப் பயன் உண்டு. அவர்கள் வர்த்தகச் சாமான்களை அதன்மேல் ஏற்றிச் செல்வார்கள். ஒட்டகத்தின்

பால் அவர்களுக்குச் சிறந்த உணவு. அதன் உரோமத்தினல் சிறந்த ஆடைகள் நெய்வார்கள். அதன் மாமிசமும் அவர்களுக்கு, உணவாகும்.

ஒட்டகத்திற்கு இனிய பாடலைக் கேட்பதில் பிரியம். அது சோர்வடைந்திருக்கும்போது நல்ல பாட்டைப் பாடுவார்களானல் அது விரைந்து ஓடத் தொடங்கும். அதற்கு மற்றொரு குணமும் உண்டு. சாமான் ஏற்றும்போது, அது முழங்காற் படியிட்டுப் படுத்துக்கொள்ளும். சுமை அதிகமா யிருப்பதாகத் தோன்றினல், அஃது எழுந்திரா மலே படுத்துக் கொண்டிருக்கும். அப்போது அதன் பாகன் ஒரு சிறு மூட்டையையேனும், ஒரு பெருங்கல்லையேனும் அதற்குத் தெரியும்படி எடுத்து அப்புறம் எறிந்துவிட்டால், அது உடனே எழுந்து செல்லத் தொடங்கும்.





## 20. வாழை மரம்.

---

வாழை மரம் நம் நாட்டில் ஒவ்வொருவர் வீட்டுப் புறக்கடையிலும் ஒன்றிரண்டாவது இருக்குமல்லவா? இவ்வாழை பெரும்பாலும் உஷ்ணமான இடங்களில் நன்றாய் வளரும். வாழை செழிப்பாய் வளருவதற்குத் தண்ணீர் இடைவிடாது ஊற்றிவர வேண்டும். அடிக்கடி நிலத்தைக் கொத்தி எருவிட்டால் நன்றாய்

வளரும். பெரும்பாலும், வாழைக் கன்றை நட்டே வாழை மரம் பயிரிடப்படுகிறது. கன்று நட்டவுடன் குருத்து வரும். பிறகு, அது இலையாகும். வாழை வைத்த பத்துப் பன்னிரண்டு மாதங்களில் குலை தள்ளும். அக்குலையில் காய்கள் சீப்புகளாய்க் காய்க்கும். மரத்தின் செழிப்புக்குத் தக்கவாறு குலையில் காய்களின் அளவு ஏற்படும்.

வாழையில் பல வகையுண்டு. பேயன் வாழை, மொந்தன்வாழை, ரஸ்தாளி, பச்சை வாழை, செவ்வாழை, கொட்டைவாழை முதலிய பலவகைகள் இருக்கின்றன. பேயன் வாழை அதிக உயரம் வளரும்.

வாழை மரத்தின் ஒவ்வொரு உறுப்பும் பிரயோசனமுள்ளது. குலைவந்த வாழைமரத்தை இந்துக்கள் கலியாணப் பந்தல்களில் கட்டுவார்கள். ஆலயங்களில் நடக்கும் திருவிழாக்காலங்களில் ஆலயப்பந்தல்களிலும் கட்டுவார்கள். வாழை மரம் கட்டுவதை மங்களகரமாகவும், அலங்காரமாகவும் நம்மவர்கள் கருதுகிறார்கள்.

வாழைக்காய் கறிக்கு உதவும். நம்தேசத்துக் கறிவகைகளில் வாழைக்காய் முக்கியமானது. மொந்தன் காயே கறிவகைக்கு அதிகமாக உபயோகிக்கப்படுகிறது. வாழைப் பூவும் பதார்த்




தமாகச் சமைத்துண்ணப்படும். வாழைப்பூ, தேக சௌக்கியத்திற்கு ஏற்றது.

வாழைப்பழம், நம் நாட்டு முக்கனிகளில் ஒன்று. வாழை, மா, பலா இம்மூன்றும் சிறந்த பழவகைகளாகக் கருதப்பட்டு வந்தன. எந்த சுபகாரியத்திற்கும் வாழைப்பழம் அவசியமானது. வாழைப்பழத்தைச் சாப்பிடாதவர்கள் ஒருவரும் இல்லை. வாழைப்பழம் கடவுளுக்கு அபிஷேகப் பொருளாகவும் உபயோகிக்கப் படுகிறது. பேயன் பழம் நோயாளிகளுக்குத் தக்க உணவாகும். ரஸ்தாளியும் சிறந்ததே. செவ்வாழைப்பழம் சுலபத்தில் ஜீரணிக்காது.

வாழையிலை போஜன பாத்திரமாக உபயோகிக்கப்படும். உணவருந்துவதற்கு வாழையிலை தான் சிறந்தது. உலர்ந்த சருகையும், சாப்பிடுவதற்கு உபயோகிக்கிறார்கள். சருகினால் தொன்னைகள் தைக்கப்படும். வாழைப்பட்டைகளையும் சிலர் சாப்பிடுவதற்கு உபயோகிக்கிறார்கள்.

வாழை நார், பூமாலை கட்ட உதவும். வாழை மரத்தில் உபயோகப்படாத உறுப்பே கிடையாது.

வாழைமரம் குலை தள்ளிய பின் அதைவெட்டிவிடுவார்கள். ஒரு முறை குலை தள்ளிய மரம் மறு

படியும் குலைதள்ளுவதில்லை. வெட்டின மரம் தான் வீணாகுமென்று நினைக்கின்றீர்களா? இல்லவே இல்லை. அதனுள் இருக்கும் தண்டுசமைத்துச்சாப் பிட உதவும். உபயோகமற்ற மட்டை முதலியவற் றைக் குப்பையில் போட்டு மூடிவிட்டால் அவை அழுகி, வயல்களுக்கு நல்ல எருவாகும்.

"மெல்லிய வாழைக்குத்தான் ஈன்றகாய் கூற்றம்" என்றபடி குலைவந்த பின்பு அது வெட் டப்பட்டும், அதன் கீழ்க்கன்று வளர்ந்து பலன் தருகின்றது. இதை நோக்கும்போது வாழை அதிக பயனுள்ளதென்று தெரிந்துகொள்வீர்க ளல்லவா?



# 21. ஆபத்தில் உதவாத நேசன்.

---

நிலவுலகில் ஓரிரண்டு நேசர்களும் அன்பாய்ப்
பல நாளாய் ஒருமித்துப் பழகிட்டார் ஓர்நாள்
சிலமரங்கள் அடர்ந்திட்ட சிறுகாட்டின் வழியே
நலமுடனே ஓரூர்க்கு நடந்திட்டார் இன்பாய்
நடக்கையிலே ஒருநண்பன் நாமென்ன செய் [வோம்
இடக்காக வனமிருகம் எய்திட்டால் என்னும்
அடக்குவதும் எவ்வாறே அறியேனே என்றான்
மடக்கிட்டே நானதனை மாய்விப்பேன் என்றான்
அவன் சொன்ன தைரியத்தால் அச்சமின்றிப் [போனார்
கவனமதாய்ச் சொல்லுகையில் கரடியொன்று [கண்டார்
உவப்புடனே கொல்லுவதாய் உறுதியிட்ட [நேசன்
கவனித்தே மரத்தருகில் கருத்தாகப் போனான்.

ஓடியவன் மரத்தின்மேல் உட்கார்ந்தே
[கொண்டான்
வாடிமிக மற்ருெருவன் வகையின்றி நின்ருன்.
கூடிவுயிர் நீங்குபிணம் கொடுங்கரடி கொள்ளா
தேடியென அறிந்திட்டே செத்தவன்போ
[லானுன்.
கடுங்கரடி பிணமென்று கைவிட்டே போக
நடுமரத்தில் இருந்தவனும் நன்ருக இறக்கி
விடுகரடி சொல்லியதென் விளம்பென்று கேட்கச்
சுடுமொழியால் மற்றவனும் சுடும்படியே சொன்
[னுன்.
துன்பத்தில் உதவாத துஷ்டர்களை என்றும்
இன்பமுடன் நண்பரென ஏற்காதே என்று
என்காதில் அக்கரடி யியம்பிற்றே என்னத்
தன்குற்றம் உணர்ந்தவனும் தலையிறங்கிச்
[சென்ருன்.





## 22. யோபின் பொறுமை.

---

அரேபியா தேசத்தில் யோப் என்னும் மகான் ஒருவர் இருந்தார். அவருக்கு ஏழு குமாரர்களும், மூன்று குமாரத்திகளும் இருந்தனர். ஆஸ்தி பாஸ்தியில் ஏழாயிரம் ஆடுகளும், மூவாயிரம் ஒட்டகங்களும், ஐந்நூறு ஏர்மாடுகளும், ஐந்நூறு கழுதைகளும் இருந்தன. தவிர, அநேக ஊழியர்களும், பணிவிடை செய்வோர்களும் இருந்தார்கள். அதனால் அவருடைய அளவில்லாத் திரவியங்களைப்பற்றியும், விசேஷமான தெய்வபக்தியைப் பற்றியும் அவர் யாவராலும் புகழப்பட்டு வந்தார்.

ஒருநாள் யோபின் குமாரர்களும், குமாரத்தி களும் தங்கள் மூத்த சகோதரன் வீட்டில் விருந் துண்டுகொண்டிருக்கையில் ஓர் வேலைக்காரன் யோபினிடம் ஓடிவந்து, "ஐயா சபேயர் உமது ஊழியர்களைக்கொன்று எருதுகளையும், கழுதை களையும் ஓட்டிக் கொண்டுபோய்விட்டார்கள்" என்று சொல்லிக்கொண்டிருக்கும்போது, இரண் டாவது வேலைக்காரன் ஓடிவந்து, "ஆகாயத்தி லிருந்து நெருப்பு விழுந்து ஆடுகளையும் இடை யனையும் எரித்துவிட்டது" என்றான். மூன்றும் ஆள் வந்து கல்தேயர் ஊழியர்களைக்கொன்று ஒட்டகங்களை ஓட்டிக்கொண்டுபோய்விட்டார்கள் என்று சொல்லிக்கொண்டிருக்கும்போதே, நாலாம் மனிதன் உமது பிள்ளைகள் விருந்துண்ணுகை யில் பெருங்காற்றடித்து வீடு இடிந்து எல்லோ ரும் இறந்தார்கள் என்றான்.

யோப் இவற்றை யெல்லாங்கேட்டபின் எழுந்து தன் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு சாஷ்டாங்க தெண்டனிட்டுக் கடவுளை ஸ்தோத் தரித்து, கடவுள் கொடுத்தார்; அதை அவரே எடுத்துக்கொண்டார். அவருடைய நாமம் துதிக் கக்கடவது என்றார். இவ்வளவு கஷ்டங்கள் நேரிட்டும் கடவுளிடத்தில் வெறுப்புக் கொள்ள

வில்லை. அதனல் கடவுள் யோபை இன்னும் பரிசோதிக்கும்பொருட்டு அவருடையசரீர முழுமையும் அழி புண்களால் வாதிக்கலானர். அப்போது அவருடைய மனைவி அவரை அறிவீனரென்று ஏசி நிந்தித்தாள். அவரோவெனில் நாம் கடவுளிடமிருந்து நன்மையைப் பெறும்போது ஏன் தீமையை மாத்திரம் பெற்றுக்கொள்ளக் கூடாது என்று கடவுளின் செய்கைக்கு விரோதமாய்ச் செய்தவரல்ல.

யோபுக்கு நேர்ந்த துன்பங்களை அவருருடைய சிநேகிதர்கள் அறிந்து, அவருக்கு ஆறுதல் கூறுவதுடன் மிகவும் வருந்தினர்கள். யோபு என்பவர் கடவுளிடம் கொண்ட நம்பிக்கை வீணய்ப் போகவில்லை. அவருக்குண்டான துன்பங்களெல்லாம் சீக்கிரத்தில் நீங்கினதுடன், முன்னைக்காட்டிலும் இரட்டிப்பு ஆஸ்திகளையும் பெற்றுக்கொண்டார். பிறகு ஏழு குமாரர்களும், மூன்று குமாரத்திகளும் உண்டானர்கள். இவர்கள் பிறந்த பிறகு நீடூழிகாலம் சுகமாக வாழ்ந்துவந்தார்கள்.





## 23. சர்க்கரை.

---

பிள்ளைகளே! சர்க்கரையை விரும்பாதவரும், அதைப் பாராதவரும் உங்களில் ஒருவரும் இல்லையென்று எண்ணலாம். ஆனால் சர்க்கரை எப்படி யுண்டாகிறதென்பது உங்களில் அநேகருக்குத் தெரிந்திராது.

சர்க்கரை நமது நாட்டில் கரும்பிலிருந்து செய்யப்படுகிறது. நீங்கள் கரும்பு தின்றிருப்பீர்களல்லவா? அதைத் தின்னும்போது அதிலுள்ள சாற்றை உட்கொண்டு சக்கையை உமிழ்ந்து விடுகிறீர்கள். அந்தச் சாற்றில் இயற்கை

யாகவே தித்திப்பு அமைந்திருக்கிறது. அதனால்தான் அச்சாற்றினால் செய்யப்படும் சர்க்கரையும் இனிப்பாயிருக்கிறது.

கரும்பிலிருந்து சாற்றை எவ்வாறு எடுக்கிறார்கள் தெரியுமா? அதற்கு ஒருவகை இயந்திரம் ஏற்பட்டிருக்கிறது. அதற்குக் கரும்பாலை என்று பெயர். அதில் இரண்டு அல்லது மூன்று உருளைகள் இருக்கும். அவை ஒன்றோடொன்று நெருங்கிச் சுழலத்தக்கவை. செக்குகளுக்கு மாடுகள் உபயோகப்படுவது போலவே, கரும்பாலைகளுக்கும் மாடுகள் உபயோகப்படும். மாடுகள் சுற்றினால் உருளைகளும் சுழலும்படி ஆலைகள் அமைத்திருக்கிறார்கள். கருப்பங் கழிகளைத் துண்டுகளாக நறுக்கி ஆலையில் உருளைகளுக்கிடையில் கொடுப்பார்கள். உருளை சுழல்வதால் கருப்பந்துண்டுகள் நசுக்குண்டு சாறு வெளிப்படும்.

அச்சாற்றைப் பெரிய பாண்டத்தில் பிடித்து, கொப்பரைகளில் விட்டுக் காய்ச்சுவார்கள். சாற்றிலுள்ள அழுக்கை எடுப்பதற்காக அதன்மீது சிறிது சுண்ணும்புநீர் தெளிப்பார்கள். அதனால் அழுக்கு நுரையாக மேலே வரும். அதை எடுத்துச் சுத்தமாக்குவார்கள். காய்ச்சிய சாறு

பாகாகி நன்றாய்ச் சுண்டிய பிறகு பெரிய மரத் தொட்டிகளில் ஊற்றி ஆறவைப்பார்கள். ஆறிய பிறகு அதுவே வெல்லக்கட்டி யாகும்.

அந்தப்பாகை ஆறவைக்காமல் இன்னும் கெட்டியாகும்படி காய்ச்சி ஆறச்செய்தால் அது பழுப்புச் சர்க்கரையாகும்.

அந்தப் பழுப்புச் சர்க்கரையை வெந்நீரில் கரைத்துக் கம்பளிப் பைகளில் ஊற்றி வடிகட்டு வார்கள். பிறகு அதைச் சுட்டெரித்த எலும்புக் கரியில் ஊற்றி வடிகட்டுவார்கள். அதன் பிறகு அதை ஒரு பாத்திரத்தில் ஊற்றி வாயை இறுக மூடிக் காய்ச்சுவார்கள். பதமாகக் காய்ந்த பிறகு அந்தப் பாகை ஆறவிட்டால் அது நல்ல வெள்ளைச் சர்க்கரையாகும்.

ஐரோப்பாவில் பீட்ரூட் என்னும் கிழங்கி லிருந்து சர்க்கரை செய்யப்படுகிறது. வட அமெரிக்காவில் சர்க்கரை மரம் என்று ஒருவகை மரம் உண்டு. அதிலிருந்து எடுக்கும் பாலினால் சர்க்கரை செய்கிறார்கள்.





## 24. வேலைக்காரர் மூடத்தனம்.

---

இப்பொழுது மிக்க செல்வமுள்ளவர்கள் போக்குவரவிற்கு மோட்டார்வண்டி, மோட் டார் சைகில் முதலியவற்றை உபயோகிக்கிறார் களல்லவா? முற்காலத்தில் அப்படிப் பட்டவை கள் இல்லை. நாட்டுப்புறத்தில் நடக்க முடியாத சாதாரணச் செல்வர்கள் இரட்டைமாட்டு வண்டி வைத்துக் கொண்டிருப்பார்கள். நகரங்களி லுள்ள செல்வர்கள் குதிரை வண்டி வைத்துக் கொள்ளுவார்கள். பெரிய ஜமீன்தாரர்கள், பெரு ஞ்செல்வமுடைய பிரபுக்கள், மடாதிபதிகள் முதலியவர்கள் போக்கு வரவிற்கு பல்லக்குகளை உபயோகித்து வந்தார்கள். அப்பல்லக்குகள் மரப்

பலகைகளால் மூடப்பட்டிருக்கும். அவற்றிற்கு மூடு பல்லக்குகள் என்று பெயர். ஏறுவதற்கும் இறங்குவதற்கும் கதவுகள் வைத்திருக்கும். தன வந்தர்கள் பல்லக்கின் உட்புறத்தில் அமைந் திருக்கும் பஞ்சு மெத்தையில் உட்கார்ந்து சாய் ந்து கொள்வார்கள். பல்லக்கின் இருபுறத்தி லும் கணைகள் இருக்கும். பக்கத்துக்கு நால் வராகச் சுமந்துபோவார்கள். அவர்களுக்குப் பல் லக்குப் போயிகள் என்று பெயர். அவர்களுக்கு எஜமானர்கள் சம்பளம் கொடுப்பார்கள். சில இடத்தில் போயிகளுக்கு நிலங்களை மானியமாக விட்டிருந்தார்கள்.

போயிகள் பல்லக்குச் சுமந்து செல்கையில் பளுவு தோன்றாதிருப்பதற்காக வாயினால் சில வற்றை இனிய ஓசையோடு சொல்லிக்கொண்டே போவார்கள். கிணற்றில் தண்ணீர் இறைக்கிற வனும் ஓர் வகைப் பாட்டுப் பாடுவதைக் கேட்டி ருப்பீர்கள். சுண்ணம்பு இடிக்கிற பெண்களும் பாடிக்கொண்டே இடிப்பார்கள். மாடுகளைப் பிணையலிட்டு ஓட்டும் வேலையாட்களும் ஓர் வகைப் பாட்டுப் பாடுவார்கள். இவ்வாறு செய்வதால் அவர்களுக்கு வேலை கஷ்டம் தோன்றாமல் இருக்கும்.

முன்னொருகாலத்தில் பல்லக்கில் பிரயாணம் செய்யும் பிரபு ஒருவன் இருந்தான். அவனிடத்தில் பல்லக்கு சுமக்கும் ஆட்களும் இருந்தார்கள். சில எஜமானர்களைப்போல அவன் வேலையாட்களைக் காரணமில்லாமல் வருத்துவதில்லை. அவர்களைக் கஷ்டம் உணர்ந்து அவர்களிடத்தில் பட்சம் பாராட்டிவருவது அவன் சுபாவம்.

ஒரு நாள் அப்பிரபு வீட்டில் கன்றுக் குட்டி காணமற்போயிற்று. அது பசுங்கன்று. அக் கன்று வந்த பிறகே அவனுக்குப் பால் கிடைக்கும். கன்றுகளைக் கவனிக்கும் வேலைக் காரன் அன்று ஏதோ காரணத்தால் வரவில்லை. அதனால் பிரபு பல்லக்கு ஆட்களைப் பார்த்து "நீங்கள் கன்றுக் குட்டியைத் தேடிப்பிடித்து வாருங்கள்" என்று சொன்னான். உடனே அக் காரியத்தில் அவர்கள் தலையிட்டிருந்தால், எஜமானனுக்கு மிக்க சந்தோஷம் உண்டாயிருக்கும். ஆனால், அவர்கள் ஒன்று சேர்ந்து எஜமானனைப் பார்த்து, "நாங்கள் பல்லக்கு சுமப்போமே யொழிய வேறுவேலை செய்யமாட்டோம். பல்லக்கு சுமப்பதுதான் எங்கள்வேலை, கன்றுக் குட்டி தேடுவது எங்கள் வேலையல்ல" என்று சொல்லிவிட்டார்கள்.

எஜமானன் கோபத்தைக் காட்டாதவனுய் "நல்லது" என்று சொல்லிவிட்டுக் கன்றுக் குட்டியை வேறு மனிதனைக்கொண்டு தேடியடைந்தான். ஆனுல் போயிகளுக்குப் புத்தி வருவிக்க வேண்டுமென்று தன் மனதில் எண்ணியிருந்தான்.

பின்னொருநாள் கன்றுக்குட்டி காணுமற் போயிற்று. அப்பொழுது நடுப்பகல்; வெயில் அதிகம். பல்லக்கு ஆட்களைப் பார்த்து, "பல்லக்குக் கொண்டுவாருங்கள், நான் கன்றுக்குட்டி தேடவேண்டும்" என்றுன். இவர்கள் மறுப்பதற்கில்லாமல் பல்லக்கு தாங்கிச் சென்ருர்கள். பல்லக்கில் ஏறிச்செல்லும் எஜமானன் அவர்களைப் பெருமணல் வழியே வெகுநேரம் செலுத்தினுன். அவர்கள் களைப்படைந்து, நாவறண்டு இனித் தங்களால் இம்மணல் வழியில்போக முடியாதென்று முறையிட்டார்கள்.

எஜமானனே! "கூடாது, கூடாது, நீங்கள் பல்லக்குச் சுமந்தே தீரவேண்டும்; பல்லக்குச் சுமப்பது உங்கள் வேலைதானே, கன்றுக்குட்டி தேடுவது உங்கள் வேலையல்ல, ஆகையால் உங்கள் வேலையை நீங்கள் செய்யவேண்டியது தானே" என்றுன். உடனே வேலையாட்களுக்

குப் புத்தி வந்தது. பிறகு அவர்கள் எஜமானன் காலில் விழுந்து மன்னிக்கும்படி கேட்டுக் கொண்டார்கள். எஜமானனும் இரக்கமுள்ளவனுதலால் அவர்கள் பிழையை மன்னித்துப் பழையபடி பட்சமாய் நடத்தி வந்தான். வேலைக்காரர்களும் அன்று முதல் எஜமானன் சொற்படி நடந்து நன்மை அடைந்தார்கள். ஆகையால் வேலைக்காரர்கள் எஜமானனுக்கு இணங்கி நடப்பது உத்தமம்.



# 25. ஸ்திரீயும், கீரியும்.

---

மண்டலந் தன்னில் ஒரூர் வாழ்ந்திடும் பெண்
[ஒருத்தி
கண்டிடக் குழந்தை இன்றிக் கவலையாய்க் கணவ
[னேடும்
எண்ணரும் தவமே செய்து இனிமையாய்ப்
[பிள்ளை பெற்ருள்
கண்ணெனக் கீரி யொன்றும் கருத்துடன் வளர்
[த்து வந்தாள்
குழந்தையுங் கீரி தானும் குலவியே வாழும்
[நாளில்
அழகதாய் இருவ ரோடும் அன்புடன் கொஞ்சி
[வாழ்வாள்
பழகியே வளருங் காலைப் பாலனை ஒருநாள் வீட்
[டில்
மழலைச்சொல் கேட்டுப் பின்பு மதலையைத் தொட்
(டிலிட்டாள்.
தன்னருங் கீரிப்பிள்ளை தான் துணையாகுமென்றே

பொன்குடம்தன்னை ஏந்திப்போயினள் தண்ணீர்
[மொள்ள

அன்னதோர் காலை தன்னில் அழகிய நாகம்
[ஒன்று
தன்பெரும் படத்தைத் தூக்கிச் சார்ந்தது குழந்
[தை பக்கம்.
பாம்பினைப் பார்த்த கீரி பாலனைக் கடிக்குமென்றே
பாம்பதைக் கொல்ல எண்ணிப் பதைப்புடன்
[கொன்ற தையா
பாம்பினைத் துண்ட மாக்கிப் பல்லினில் ரத்தத்
[தோடும்
போம்வழி நீர்க்குச் சென்ற பூவையும் வந்து
[பார்த்தாள்.
பார்த்ததும் கீரி செய்த பயனது தெரியா ளாகி
வேர்த்துமே கீரி தானும் விருப்புடைக் குழந்தை
[தன்னை
ஈர்த்துமே கொன்ற தென்ன எண்ணியே கீரி
[மேலே
நீர்க்குடம் தன்னைப் போட்டாள் நீங்கிய துயிர்
[தானையோ.
ஓடினாள் குழந்தை கண்டாள் உயிருட னிருக்கப்
[பார்த்தாள்
நாடினாள் பாம்பின் துண்டம் நடந்தது உணர்ந்
[தாள் பின்பு

தேடினுள் கிரி பார்த்தாள் செய்ததுபிசகே என்று

வாடினுள் பதைத்துச் சோர்ந்தாள் வாய்விட்டுக்
[கூவ லானுள்.

எண்ணுது செய்தோ மென்றே ஏங்கினுள் பாவம்
[ஐயோ

எண்ணுது செய்து பின்பே ஏங்கினுல் பயன் தான்
(என்னே

எண்ணுதே ஒன்றைச் செய்தால் இப்படி யாகும்
[பிள்ளாய்

எண்ணியே எதையும் செய்வாய் இதனை நீ
[கை விடாதே.





## 26. தீபஸ்தம்பம்.

---

தீபஸ்தம்பம் என்பது, விளக்கு வைக்கப் பெற்ற கம்பம் எனப் பொருள்படும். இது சமுத்திரக்கரையில் விளக்கு வைப்பதற்காக உயரமாகக் கட்டப் பட்டிருக்கும். இதன் உயரம் ஐம்பது முதல் நூறடி வரையில் உயர்ந்து இருக்கும். தூரப்பார்வைக்கு ஒரு தூணைப்போலி ருக்கும். இது, கடலோரமாயுள்ள பட்டணங்களி

லும் கடலின் நடுவே சில மலைகளிலும், ஒரு பாறையின்மேல் பெரும்பாலும் கட்டப்பட்டிருக்கும். நானுதேசங்களினின்றும், தீபாந்தரங்களிலிருந்தும் போக்கு வரவு செய்யும் கப்பல்கள், குறித்த இடத்தை எளிதிற் கண்டு சேரவும், வழி தப்பிப் பாறைநிலம் முதலிய இடங்களில் மோதிச் சேதப்படாதிருக்கவும், இது, சமுத்திரக் கரையில் கட்டப்பட்டிருக்கிறது.

இவ்வாறு கட்டப்படும் தீபஸ்தம்பங்களில் ஒன்றன் கீழ் ஒன்ருகப் பல அறைகள் உண்டு. இந்த அறைகள் வேலைக்காரர்கள் தங்குவதற்கும், சாமான்கள் வைத்துக்கொள்வதற்கும் அவ்வாறு அமைக்கப் பட்டிருக்கின்றன. அவ்வறைகள் எல்லாவற்றிற்கும் மேலே உள்ள அறையில்தான் விளக்கு வைக்கப்படும். மேலே ஏறுவதற்கு தீபத்தின் உட்புறமாக, அடியிலிருந்து சுழற்படிகள் கட்டப்பட்டிருக்கும். இப் படிக்கட்டின் மேல் சுற்றிச் சுற்றி ஏறவேண்டும்.

மேல் குறித்த தீபஸ்தம்பங்களில் வைக்கப் படும் விளக்குகள் எல்லாம் ஒரே விதமான பிரகாசத்தைக் கொடுப்பதில்லை. ஒரே விதமாகப் பிரகாசிக்குமானல், அப்படிப்பட்ட விளக்குக் கம்பங்கள் ஒன்றுக்கொன்று சமீபமாயிருக்கும் இடங்

களில் மாலுமிகள் அவற்றைப் பகுத்தறிய முடியாமல் வருந்துவார்கள். சில விளக்குகள் இரவெல்லாம் ஒளியில் சிறிதும் வித்தியாசமில்லாமல் ஒரே விதமாக ஒளியைத்தரும். சில தீபங்கள் சுழன்று கொண்டேயிருக்கும். சில, பளிக்சுப் பளிச்சென்று பிரகாசிக்கும். சில தீபஸ்தம்பங்களில் சிவப்பு, நீலம், பச்சை நிறமுள்ள கண்ணுடிகள் வைக்கப்பட்டு, அதனுல் அந்தந்த வர்ணங்களைக் கொண்டே ஒளி வீசும்.

இப்படி வைக்கப்படும் தீபவொளி கட்டடத்தின் உயரத்திற்குத் தக்கதும், அவ்வொளியின் வன்மைக்கு ஏற்றதுமான தூரத்தில் சென்று பிரகாசிக்கும்.

மேல் சொன்ன விளக்குகளில் சிலவற்றில் எண்ணெய் விளக்குகளையும், மின்சார விளக்குகளையும், வாயு விளக்குகளையும் (**Gas Lights**) உபயோகிப்பார்கள்.

சமுத்திரத்தில் அநேக இடங்களில் அபாயமான பெரும்பாறைகள் தண்ணீர் மட்டத்திற்குக் கீழே இருக்கும். அவைகள் இராக்காலங்களில் கண்ணுக்குத் தெரியா. ஆகையால் இன்னவழியில் சென்ருல் அபாயமில்லையென்பதை இத் தீபஸ்தம்பத்தின் ஒளியால் அறிந்து அவ்வகை

யான மலைகளுக்குத் தப்பித் தாம் குறித்த இடத்திற்கு எளிதில் கப்பலைச் செலுத்துவார்கள். இதற்குக் "கலங்கரை விளக்கம்" என்னும் பெயரும் உண்டு.





## 27. ஆறுகள்.

நாம் அநேக ஆறுகளைப் பார்த்திருக்கிறோமல்லவா? அவற்றின் நீரைக் குடிக்கிறோம். அந்நீரில் குளித்துச் சுத்தமடைகிறோம். இதுவே ஆற்றைப்பற்றி நாம் அறிந்துள்ள

விஷயம். பயரிடுவோருக்கு ஆற்றைப்பற்றி இன்னும் கொஞ்சம் அதிகமாய் தெரியும். ஆற்றுக்கால் வழியாய்த் தண்ணீரைக் கொண்டுபோய்த் தங்கள் பயிர்களுக்குப் பாய்ச்சிப் பயனடைகிறார்கள். ஆனால், நம்மில் அநேகருக்கு ஆறுகள் எவ்வாறு ஏற்படுகின்றன என்பது தெரியாமல் இருக்கலாம். இதை அறிவதற்குமுன், வேறொரு விஷயத்தை யோசிக்கலாம். மழை பெய்வதற்கு முன் நம் அருகிலுள்ள ஒரு பாதையை உற்று நோக்குவோம். அது சமமட்டமாக இருப்பதாகத் தோன்றுகின்றது. மழை பெய்யத்தொடங்கும் பொழுது அதில் மழைத்துளிகள் விழுகின்றன. அத்துளிகள் சிறு குழிகளை உண்டாக்கும். மழை பலமாய்ப் பெய்யுமானால் இக்குழிகள் எல்லாம் சேர்ந்து கலந்து போகும். அப்போது மழைத்துளிகள் ஒன்றாகச் சேர்ந்து சிறு தாரைகளாகி ஒருபுறம் நோக்கி ஓடத்தொடங்கும். பாதையில் கண்டவிடமெல்லாம் ஓடாமல் ஒரு புறமாய் ஓடுவதால் அந்த இடம் சரிவாய்த் தோன்றும். அதில் வண்டித் தடங்களிருந்தால் அவ்வழியாகவும் ஓடத்தொடங்கும். வழியில் மேடான இடங்களிருப்பின், அவற்றின்மேல் ஓடாது, பக்கத்தில் வளைந்து ஓடும். இடை

விடாமல் ஜலம் ஓடிக்கொண்டிருந்தால் ஓடும் பாகம் பள்ளமாகி விடும். பிறகு பாதையில் விழும் ஜலமெல்லாம் மேடான இடத்தை ஒதுக்கிக்கொண்டு அப்பள்ளத்தின் வழியாகவே பாய்ந்துகொண்டிருக்கும்.

அதுபோலவே, ஆகாயத்திலிருந்து விழுகின்ற மழைத்தாரையானது மேடான மலைப் பாகங்களிலும், பூமியின் மேடான பாகங்களிலும் விழும்போது ஆங்காங்குள்ள தாழ்ந்த பாகங்களில் சிற்ருறுகள் உண்டாகின்றன.

பிறகு, இவை நிலச்சரிவுக்கேற்ப ஓடிச் சேர்ந்து பெரிய நதியாகும். இது செல்லும் வழியில் மேடான பாகங்களிருந்தால் அவைகளால் தடைபடுகின்றன. அதனுல், வந்தமார்க்கம் மாறித் தாழ்ந்த பாகங்களைத் தேடிச் செல்லுகின்றன. இதனுலேதான் ஆறுகள் வளைந்து செல்லவும் நேரிடுகின்றது.

மற்ற நீர்நிலைகள் வேனிற்காலத்தில் வறண்டு போவதுபோல, ஆறுகள் வறண்டுபோகமாட்டா. சில நதிகளில் வேனிற்காலத்திலும் நீர்ப்பெருக்குண்டு. கங்கை, யமுனை, பிரமபுத்திரா, சிந்து முதலிய நதிகளில் வேனிற்காலத்திலும் ஜலம்

ஓடிக்கொண்டிருக்கும். மற்ற நதிகளில் வேனிற் காலத்தில் ஜலம் இல்லாமற் போனபோதிலும், சிறிது தோண்டினுல் சொற்ப ஆழத்தில் நீர் காணலாம். இதனுல் மழைகாலத்தில் பூமியுள் முழுகி மறையும் தண்ணீர் ஊற்றுக்களாகக் காணப்படுவதை அறிகிருேம்.

ஆறுகள் பாய்வதினுல் நிலங்கள் சிதைவு பட்டுத் திட்டுகள் உண்டாகின்றன. அன்றியும் ஆறுகள் நிலத்தின் சிதைவுகளைச் சமுத்திரத்தில் கொண்டுபோய்ச் சேர்க்கின்றன. அதனுல் சமுத்திரத்தில் புதிய நிலமட்டம் உண்டாகிறது. ஆறுகள், பூமியில் மூழ்கியதுபோக, உபயோகமற்ற நீரைக் கடலில்சேர்க்கின்றன. கடல்நீர் மழைக்கு ஆதாரமாயிருப்பதால், ஆறுகள் நீரைக் கடலில் சேர்ப்பதும் உபயோகமே.

"கான்யாற்றடை ஊரினிது" "ஆறில்லா ஊருக்கு அழகு பாழ்" என்று கவிகள் ஆற்றைப் புகழ்ந்திருக்கிருர்கள். மேலும், நம்மவர்கள் ஆறுகளைத் தெய்வமாக எண்ணிப் பூசித்து வந்தவர்கள். ஆதலால், அவர்கள் ஆறுகளில் அசுத்தம் செய்யப்பயந்து, ஆறுகளைச் சுத்தமாய்க் காப்பாற்றிப் பயனடைந்தார்கள். இப்பொழுதோ அப்படியல்ல. ஊர் அருகாமையிலுள்ள ஆறு

களிலும், கரைகளிலும் பலவகை அசுத்தங்களைச் செய்து கெடுத்துவருகிருர்கள். சில இடங்களில் ஊர்ச் சாக்கடைத் தண்ணீர்கூட அதில் வந்து விழுகிறது. ஆகையால் ஆறுகள் ஊருக்கு அருகில் இருப்பது கெடுதி என்றுகூடக்கூற வேண்டி வருகிறது. ஆதலால் ஆறுகளைச் சுத்தமாய் வைத்துக்கொள்ளல் வேண்டும்.





## 28. வாய்மை.

---

சென்னையில், கந்தன், முருகன் என்ற இரண்டு பிள்ளைகள் இருந்தார்கள். அவர்களில் கந்தன் மூத்தவன். அவனுக்கு வயது பன்னிரண்டு இருக்கலாம். இளையவன் அவனுக்கு ஒரு வருஷம் சிறியவன். இவர்களின் தாய்தந்தையர் இவர்கள் சிறு வயதிலேயே இறந்துவிட்டார்கள். அவர்கள் இறக்கும்பொழுது இக்குழந்தைகளுக்கு ஆஸ்தி ஒன்றும் வைக்கவில்லை. இவர்

கள் உறவினர்கள் இவர்களைக் கவனியாது விட்டு விட்டனர். இருவரும் புத்திசாலிகள். ஒருவரை விட்டு ஒருவர் பிரிந்ததில்லை. இருவரும் சேர்ந்து பிச்சை எடுத்துத் தங்களுக்குக் கிடைத்த ஆகாரத்தைத்தின்றுவிட்டு ஓர் சத்திரத்தில் தூங்குவார்கள். ஒரு நாள் கடைத்தெருவின் வழியாக இவர்கள் சென்றபொழுது ஓர் ரொட்டி வியாபாரி இவர்களைப் பார்த்தான். அவன் இவர்களை நோக்கி, "குழந்தைகளே! நீங்கள் தினமும் ரொட்டி விற்று வாருங்கள்; உங்களுக்கு உணவும் உடையும் கொடுக்கிறேன்" என்றான். அவ்விருவரும் அதற்கு ஒப்புக்கொண்டு அவனிடம் வேலைக்கு அமர்ந்தார்கள்.

ஒரு நாள் சூரியன் அஸ்தமிக்கும் சமயம் மழை காலமானதால் சிறிது மழை பெய்து கொண்டிருந்தது. பாதை சொத சொத என்று சேறு நிறைந்திருந்தது. இவர்களில் மூத்தவன் ஓர் தூக்குக்கூடையில் ரொட்டியை எடுத்துக் கொண்டு ஓர் சிற்றுண்டிச்சாலையின் வாயிலில் நின்றான். அச்சமயம் அவ்விடத்தில் உணவு அருந்துவதற்காக ஓர் பெரியமனிதர் அங்கே வந்தார்.

அவரிடம் கந்தன் சென்று 'ஐயா ! ரொட்டி வாங்கிக் கொள்ளுங்கள். நல்ல ரொட்டி, வெண்ணெய் ரொட்டி' என்றான்.

அவர் தனக்கு ரொட்டி வேண்டாமென்று தலையை அசைத்தார். அவன் "இன்றைக்கு அடியோடு ஒன்றும் விற்கவில்லை. தயவுசெய்து வாங்கிக்கொள்ளுங்கள். உங்களுக்கு நயமாகக் கொடுக்கிறேன்" என்றான். அவன் சொன்னதைக் கேட்ட அப்பிரபு பரிதாபங்கொண்டு கால் ரூபாயைக் கொடுத்து இரண்டு அணுவிற்கு ரொட்டி கேட்டார்.

அப்பையன் இரண்டணுவிற்கு ரொட்டி கொடுத்துவிட்டு, தன்னிடம் சில்லரையில்லாததால் சில்லரை வாங்கிவருவதாகச்சொல்லி எதிர்க் கடைக்குச் சென்றான்.

சென்றவன் திரும்பி வரவில்லை. அப்பிரபு சற்றுநேரம் பார்த்து அப்பிள்ளை வராததால் வீடு போய்ச் சேர்ந்தார்.

மறுநாள் வழக்கம்போல அப்பிரபு சிற்றுண்டிச்சாலைக்குச் சாயந்திரம் வந்தார். அப்பொழுது கந்தனைப் போலவே ஒரு பையன் ரொட்டி கொண்டுவந்து 'ஐயா! நேற்றுக்கால் ரூபாய் கொடு

த்து இரண்டு அணுவிற்கு ரொட்டி வாங்கின பிரபு தாங்கள் தானு?' என்று கேட்டான்.

'வாஸ்தவந்தான். அவனெங்கே. நீயார்?' என்ருர் பிரபு. 'அவன் என் அண்ணன். நேற்றுச் சில்லரைக்குப்போகும்பொழுது சறுக்கி விழுந்து அவனுக்குக் கால் ஒடிந்துவிட்டபடியால் அவனே நேராக ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோய் விட நேரிட்டது. இன்றைக்குத்தான் அவனுக்குச் சிறிதுகுணம். தங்களுக்கு அப்பணத்திற்குப் பதிலாக இதைக் கொடுக்கும்படி சொன்னன். மன்னிக்கவேண்டும்' என்ருன்.

அப்பிரபுவின் கண்களில் நீர்ததும்பிற்று. 'நீ பயப்படாதே. நானும் உன்னுடன் ஆஸ்பத்திரிக்கு வருகிறேன்' என்று அவரும் ஆஸ்பத்திரிக்குச்சென்று கந்தனுக்கு வேண்டிய உதவி செய்தார்.

இப்பாடத்தில் இவர்கள் எவ்வளவு வாய்மையாய் நடந்து கொண்டார்கள் பாருங்கள் 'வாய்மை கடலிலும் பெரிது'.



# கொன்றை வேந்தன்.

(ஒளவையார் அருளிச்செய்தது)



அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்.
ஆலயம் தொழுவது சாலவும் நன்று.
ஈயார் தேட்டைத் தீயார் கொள்வார்.
ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்.
எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்.
ஏவா மக்கள் மூவா மருந்து.
ஐயம் புகினும் செய்வன செய்.
ஒளவியம் பேசுதல் ஆக்கத்திற்கு அழிவு.
கற்பெனப் படுவது சொல்திறம் பாமை.
கிட்டாதாயின் வெட்டென மற.

கீழோராயினும் தாழ உரை.
குற்றம் பார்க்கின் சுற்றம் இல்லை.
கைப்பொருள் தன்னின் மெய்ப்பொருள் கல்வி.
கொற்றவன் அறிதல் உற்றிடத்து உதவி.
சீரைத் தேடின் ஏரைத் தேடு.
சூதும் வாதும் வேதனை செய்யும்.
சோம்பர் என்பவர் தேம்பித் திரிவர்.
தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை.
தாயிற் சிறந்தொரு கோயிலும் இல்லை.
திரைகடல் ஓடியும் திரவியம் தேடு.

தீராக் கோபம் போராய் முடியும்.
தேடாது அழிக்கின் பாடாய் முடியும்.
தொழுதூண் சுவையின் உழுதூண் இனிது.
தோழனோடும் ஏழைமை பேசேல்.
நல்லிணக்க மல்லது அல்லல் படுத்தும்.
நாடு எங்கும் வாழக் கேடு ஒன்று மில்லை.
நுண்ணிய கருமமும் எண்ணித் துணி.
பாலோ டாயினும் காலம் அறிந்துண்.
பிழையது பொறுக்கின் பெரியோ ராவர்.
புலையும் கொலையும் களவும் தவிர்.
பொல்லாங்கு என்பவை எல்லாம் தவிர்.

மருந்தோ டாயினும் விருந்தோ டுண்.
முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்.
மூத்தோர் சொல்லும் வார்த்தை அமிர்தம்.
மேழிச் செல்வம் கோழை படாது.
வளவ னாயினும் அளவறிந்து அழித்துண்.
வானம் சுருங்கின் தானஞ் சுருங்கும்.
ஊக்கம் உடைமை ஆக்கத்திற்கு அழகு.
வேந்தன் சிறின் ஆந்துணை இல்லை.
வையந் தோறும் தெய்வம் தொழு.
ஓதாதார்க்கு இல்லை உணர்வொடு ஒழுக்கம்.



# வெற்றிவேற்கை.

(அதிவீரராம பாண்டியர் அருளிச்செய்தது)

---

1 எழுத்தறி வித்தவன் இறைவன் ஆகும்.
2 கல்விக்கு அழகு கசடுஅற மொழிதல்.
3 மன்னவர்க்கு அழகு செங்கோல் முறைமை.
4 மந்திரிக்கு அழகு வரும்பொருள் உரைத்தல்.
5 தந்திரிக்கு அழகு தறுகண் ஆண்மை.
6 உண்டிக்கு அழகு விருந்தோடு உண்டல்.
7 அறிவோர்க்கு அழகு கற்றுணர்ந்து அடங்கல்.
8 வறியோர்க்கு அழகு வறுமையிற் செம்மை.
9 தேம்படு பனையின் திரள்பழத்து ஒரு விதை
வானுற ஓங்கி வளம்பெற வளரினும்
ஒருவர்க்கு இருக்க நிழலா காதே.
10 தெள்ளிய ஆலின் சிறுபழத்து ஒருவிதை
தெண்ணீர்க் கயத்துள் சிறுமீன் சினையினும்
நுண்ணிதே ஆயினும் அண்ணல் யானை
அணிதேர்ப் புரவி ஆள்பெரும் படையொடு
மன்னர்க்கு இருக்க நிழலா கும்மே.
11 பெரியோ ரெல்லாம் பெரியரும் அல்லர்.
12 சிறியோர் எல்லாம் சிறியரும் அல்லர்.
13 பெற்றோர் எல்லாம் பிள்ளைகள் அல்லர்.
14 உற்றோர் எல்லாம் உறவினர் அல்லர்.

15 அடினும் ஆவின்பால் தன்சுவை குன்றாது.
16 சுடினுஞ் செம்பொன் தன்னொளி கெடாது.
17 அரைக்கினும் சந்தனம் தன்மணம் அறாது.
18 புகைக்கினும் காரகில் பொல்லாங்கு கமழாது.
19 கலக்கினும் தண்கடல் சேறு ஆகாதே.
20 ஒருநாள் பழகினும் பெரியோர் கேண்மை
இருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே.
21 நூறாண்டு பழகினும் மூர்க்கர் கேண்மை
நீர்க்குள் பாசிபோல் வேர்க்கொள் ளாதே.
22 பெருமையுஞ் சிறுமையும் தான்தர வருமே.
23 சிறியோர் செய்த சிறுபிழை எல்லாம்
பெரியோ ராயின் பொறுப்பது கடனே.
24 சிறியோர் பெரும்பிழை செய்தன ராயின்
பெரியோர் அப்பிழை பொறுத்தலும் அரிதே.
25 கற்கை நன்றே கற்கை நன்றே
பிச்சை புகினுங் கற்கை நன்றே.
26 கல்லா ஒருவன் குலநலம் பேசுதல்
நெல்லினுள் பிறந்த பதரா கும்மே.
27 நாற்பால் குலத்தின் மேற்பா லொருவன்
கற்றில னாயின் கீழிருப்பவனே.
28 எக்குடிப் பிறப்பினும் யாவரே யாயினும்
அக்குடிக் கற்றோரை மேல்வரு கென்பார்.
29 அறிவுடை ஒருவனை அரசனும் விரும்பும்.
30 யானைக் கில்லை தானமும் தருமமும்.
31 பூனைக் கில்லை தவமும் தயையும்.
32 ஞானிக் கில்லை இன்பமும் துன்பமும்.

33 சிதலைக் கில்லை செல்வமும் செருக்கும்.
34 முதலைக் கில்லை நீத்தும் நிலையும்.
35 அச்சமும் நாணமும் அறிவிலோர்க் கில்லை.
36 நாளுங் கிழமையும் நலிந்தோர்க் கில்லை.
37 கேளும் கிளையும் கெட்டோர்க் கில்லை.
38 உடைமையும் வறுமையும் ஒருவழி நில்லா.
39 குடைநிழ லிருந்து குஞ்சரம் ஊர்ந்தோர்
நடைமெலிந்து ஓரூர் நண்ணினும் நண்ணுவர்.
40 அறத்திடு பிச்சை கூவி இரப்போர்
அரசோடு இருந்து அரசாளினும் ஆளுவர்.
41 இல்லோர் இரப்பதும் இயல்பே இயல்பே.
42 இரந்தோர்க்கு ஈவதும் உடையோர் கடனே.
43 தறுகண் யானை தான்பெரி தாயினும்
சிறுகண் மூங்கிற் கோற்கு அஞ்சும்மே.
44 கொடுங்கோல் மன்னர் வாழு நாட்டில்
கடும்புலி வாழுங் காடு நன்றே.
45 தன்னா யுதமும் தன்கையிற் பொருளும்
பிறன்கையிற் கொடுக்கும் பேதையும் பதரே.
46 பொய்யுடை ஒருவன் சொல் வன்மையினால்
மெய்போலும்மே மெய்போலும்மே.
47 மெய்யுடை ஒருவன் சொலமாட்டாமையால்
பொய்போ லும்மே பொய்போ லும்மே.
48 துணையோ டல்லது நெடுவழி போகேல்.
49 வழியே ஏகுக வழியே மீளுக.



# பழமொழி.

விளையும் பயிர் முளையிலே தெரியும்.

சங்கு சுட்டாலும் வெண்மை தரும்.

கடுகு செத்தாலும் காரம் போகாது.

பூவோடு சேர்ந்த நாரும் மணம்பெறும்.

உயர உயரப் பறந்தாலும் ஊர்க்குருவி செம்பருந்தாகாது.

பாம்புக்குப் பால்வார்த்தாலும் படுவிஷமே தரும்.

உள்ளவனுக்கு எல்லாம் உறவு.

யானை இருந்தாலும் ஆயிரம்பொன்; செத்தாலும் ஆயிரம் [பொன்.

நிறைகுடம் நீர்தளும்பாது குறைகுடம் கூத்தாடும்.

அடாது செய்பவர் படாது படுவர்.

காற்றுள்ள போதே தூற்றிக்கொள்.

அடிமேல் அடிவைத்தால் அம்மியும் நகரும்.

நிழலருமை வெயிலில் போனால் தெரியும்.

அரசன் அன்றுகொல்வான், தெய்வம் நின்று கொல்லும்.

திக்கற்றவனுக்குத் தெய்வமே துணை.

அவனன்றி ஓரணுவும் அசையாது.

அழுதபிள்ளை பால்குடிக்கும்.

அழையாத வீட்டுக்கு நுழையாத சம்பந்தி.

அளவுக்கு மிஞ்சினால் அமுதமும் விஷமாம்.

அற்பருக்கு வாழ்வு வந்தால் அர்த்தராத்திரியில் குடை [பிடிப்பார்கள்.



